# சைவ நெறி

## தரம்

## 7

**கல்வி வெளியீட்டுத் திணைக்களம்**



சகல பாட நூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக் கொள்வதற்கு **www.edupub.gov.lk** வலைத்தளத்தை நாடுங்கள்.

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம் நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கில் தரம் 6 முதல் தரம் 11 வரை சுமார் 91 வகையான பாடநூல்கள் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்,

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி),

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**சி. காண்டீபன் - 2018**

அபிவிருத்தி அலுவலர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**லெனின் மதிவானம்**

பிரதிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## நூலாக்கக் குழு

**எஸ். தர்மரத்தினம்**

உதவிக் கல்விப் பணிப்பாளர்,

வலயக் கல்விப்பணிமனை, கிளிநொச்சி.

**டி. இராஜேந்திரன்**

ஆசிரிய ஆலோசகர், ஹட்டன்.

**எஸ். சேதுரட்ணம்**

ஆசிரியர், ப/ தமிழ் மத்திய மகா வித்தியாலயம்,

பண்டாரவளை.

**சாந்தி ரமேஸ்**

ஆசிரியர் - சைவ மங்கையர் கழகம், கொழும்பு.

## பதிப்பாசிரியர் குழு

**நாச்சியார் செல்வநாயகம்**

சிரேஷ்ட விரிவுரையாளர், யாழ். பல்கலைக்கழகம்.

**பொ.ஜெயரூபன்**
செயற்றிட்ட அதிகாரி, தேசிய கல்வி நிறுவகம்.

**எல்.சிவராஜா**
அதிபர் - எலமான் த.ம.வி, பதுளை.

## பதிப்பாசிரியர் குழு- மொழி

**எஸ். ரமணராஜா**
விரிவுரையாளர்,
இந்துநாகரிகத் துறை, யாழ். பல்கலைக்கழகம்.

**என். சகிலா**
அபிவிருத்தி அலுவலர் - கல்வி அமைச்சு.

## சரவை நோக்கு

**க. சிவபாலசுந்தரம்**
ஆசிரிய ஆலோசகர், ஹட்டன்.

## கணினி வடிவமைப்பு

**ஆர். கவியாழினி**
கணினி வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## நூல் வடிவமைப்பு - 2018

**சத்திவேல் சத்தியசீலன்**
பக்க வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## முகப்பு வடிவமைப்பு - 2018

**சத்திவேல் சத்தியசீலன்**
பக்க வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

# உள்ளடக்கம்

உ

சிவமயம்

# கடவுள் வணக்கம்

திருச்சிற்றம்பலம்

அங்கத்துறு நோய்களடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடல் மாதோட்ட நன்னகரிற்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே.

திருச்சிற்றம்பலம்

# 1 தாயுமானவர் கதை



சைவ சமயத்தவர் மிகப்பழங்காலந்தொட்டே கடவுள் நம்பிக்கை உடையவர்கள். கடவுள் உயிர்கள் அனைத்திற்கும் மேலானவர் என்றும், கடவுள் ஒருவரே உண்மையானவர் என்றும், அவர் கருணை உள்ளம் கொண்டவர் என்றும், அசையாத நம்பிக்கை உடையவர்கள். கடவுள் மீது எவர் மாறாத பக்தி கொள்கின்றாரோ, அவருக்குத் துன்பம் வரும்போது வேண்டிய வடிவில் வந்து இறைவன் அருள்பாலிப்பார் என்பதனை சைவ அருளாளர்களின் வாழ்வியல் மூலம் அறிய முடிகின்றது. இதற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் தாயுமானவர் கதையினை இப்போது படிப்போம்.

பல ஆண்டுகளுக்கு முன்னர், திருவானைக்காவில் மூதாட்டி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் கடவுளில் மிகுந்த பக்தியுடையவர். ஒவ்வொரு நாளும் அந்த அம்மையார் திருச்சிராப்பள்ளிக்குச் சென்று, அங்குள்ள இறைவனுக்குப் பூமாலை கட்டிக்கொடுக்கும் திருத்தொண்டினைத் தவறாது செய்துவந்தார்.

அந்த மூதாட்டிக்கு மகள் ஒருத்தி இருந்தாள். அவள் பிரசவத்திற்காகத் தாயார் வீட்டிற்கு வந்திருந்தாள். அக்காலத்தில் தாயார் வழக்கப்படி பூமாலை கட்டிக் கொண்டு திருச்சிராப்பள்ளி சிவன் ஆலயத்திற்குச் சென்று அங்கு சுவாமி தரிசனம் முடித்துக்கொண்டு, வீடு திரும்பும் வேளையில் காவிரியாறு பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. மூதாட்டியால் ஆற்றைக் கடந்து செல்ல முடியவில்லை. ஓடக்காரர் எவரும் ஆற்றின் பிரவாகத்திற்கு அஞ்சி ஓடத்தைச் செலுத்த முன்வரவில்லை. மூதாட்டி செய்வதறியாது வேதனைப்பட்டார்.

ஆனால், அவர் திருச்சிராப்பள்ளிக் குன்றுடையான் மீது வைத்த பெரும் பக்தி யினால் அந்த இறைவனையே தனக்கு உதவும்படி வேண்டினார். அவ்வேளையில் மூதாட்டியின் மகளுக்கு பிரசவவேதனை ஏற்பட்டது. அம்மையாரின் வீடு தனிமை யான ஓரிடத்தில் இருந்தது. அக்கம் பக்கத்தில் வேறு யாருமில்லை. எனவே, உதவிக்கு ஒருவரும் இருக்கவில்லை. கோயிலுக்குச் சென்ற தாயார் திரும்பவில்லையே என்ற மனவேதனையும், உடல்வேதனையும் சேர்ந்து அவளைப் பெரிதும் வருத்தியது.

அப்போது மூதாட்டி ஒருத்தி அங்கு வந்தாள். அந்த மூதாட்டி முற்றுமுழுதாக அப்பெண்ணின் தாயைப் போன்றே இருந்தாள். மகள், தாயே வந்துவிட்டதாக எண்ணி மகிழ்ந்தாள். அந்த மூதாட்டி அப்பெண்ணுக்குத் தேவையான சகல உதவிகளையும் செய்தாள். பிரசவம் சுகமாக நடந்தேறியது. அதன் பின்பு தாய்க்கும், குழந்தைக்கும் செய்ய வேண்டிய சுத்திகள் யாவற்றையும் செய்தாள். மகளின் உணவு முதலிய தேவைகளையும் நிறைவேற்றினாள்.

இந்நிலையில் காவிரி ஆற்றுப்பெருக்கு மூன்று நாட்களின் பின், குறைந்த தைக்கண்டு மூதாட்டி வீட்டுக்குப் புறப்பட்டாள். மிகுந்த ஆவலோடு வீட்டு வாயினுள் நுழைந்தாள். அதுவரைக்கும் மகளுக்குப் பெருந்துணையாக இருந்த மூதாட்டி திடீரென மறைந்துவிட்டாள். அம்மையார் வீட்டிற்குள் வந்து மகளும், பேரக்குழந்தையும் சுகமாக இருப்பதைக்கண்டு பூரித்துப்போனார். அவர்களைக் கட்டித் தழுவிக்கொண்டு,

‘மகளே! உனக்குப் பிரசவ காலத்தில் உதவி புரிந்தவர் யார்?’ என்று ஆவலோடு கேட்டார். மகளுக்கு என்ன சொல்வ தென்றே தெரியவில்லை. ‘அம்மா! ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்? நீங்கள் தானே எல்லாவற்றையும் இரவு பகலாகச் செய்தீர்கள். இப்பொழுது யார் உதவி புரிந்தவர் என்று கேட்கிறீர்கள்’ என்று சற்றுப் பதற்றத்துடன் கேட்டாள்.

இவற்றைக் காது குளிரக்கேட்ட அம்மையார், ‘இது நான் வணங்கும் சிவபெருமானின் திருவருட்செயல்தான். எம்பெருமான் இந்த ஏழைகள் மீது இத்துணை கருணை கொண்டுள்ளாரே! கடவுளை நம்பினோர் கைவிடப்படார்’ என்பது முழுதும் உண்மை என்று எண்ணி, ‘மகளே, திருச்சிராப்பள்ளியில் வீற்றிருக்கும் சிவபெருமானே உனக்கு வேண்டிய காலத்தில் தாயாக வந்து துணையாக இருந்தார். அதற்கு நீ எவ்வளவு தவஞ் செய்திருக்க வேண்டும்’ என்று கூறினார்.



அன்று முதல் திருச்சிராப்பள்ளிக் குன்றுடையானுக்கு ‘**தாயுமானவர் சுவாமி**’ என்னும் திருநாமம் வழங்கப்பட்டு வருகின்றது. இறைவன் எம்மைத் தாய் போன்று காப்பவர் என்பதனை இந்நிகழ்வின் மூலம் உணர முடிகின்றது.

## பாடச் சுருக்கம்

- கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.
- கடவுள் உயிர்கள் அனைத்திற்கும் மேலானவர்.
- கடவுள் ஒருவரே உண்மையானவர், அவர் எமக்கு என்றும் துணையாக இருப்பவர் என்பதனை தாயுமானவர் கதையினூடாக அறியமுடியும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. மூதாட்டி செய்த இறை தொண்டு யாது?
2. சுவாமி தரிசனம் முடித்துத் திரும்பிய மூதாட்டி, வீடு செல்ல முடியாமைக்குரிய காரணம் யாது?
3. திருச்சிராப்பள்ளிக் குன்றுடையானுக்குத் தாயுமானசுவாமி எனப் பெயர் வரக்காரணம் யாது?
4. மூதாட்டி செய்வதறியாது வேதனைப்பட்டு, தனக்கு உதவும்படி யாரிடம் வேண்டினார்?
5. இக்கதையினூடாக நீங்கள் பெற்றுக்கொண்ட படிப்பினைகள் யாவை?

## பயிற்சிகள்

**தரப்பட்ட சொற்களை வைத்துக் கீறிட்ட இடங்களை நிரப்புக.**

**காவிரி ஆறு, குன்றுடையான், தாயுமானவர் சுவாமி, மாறாத பக்தி, உயிர்கள்**

1. கடவுள் ________________ அனைத்திற்கும் மேலானவர்.
2. கடவுள் மீது எவர் ________________ கொள்கின்றாரோ, அவருக்குத் துன்பம் வரும்போது வேண்டிய வடிவில் வந்து அருள்புரிவார்.
3. திருச்சிராப்பள்ளிக்கும், திருவானைக்காவிற்குமிடையே ________________ உள்ளது.
4. மூதாட்டி திருச்சிராப்பள்ளி ________________ மீது பெரும்பக்தி கொண்டவர்.
5. திருச்சிராப்பள்ளிக் குன்றுடையானுக்கு ________________ எனும் திருநாமம் வழங்கப்பட்டு வருகின்றது.

## செயற்பாடு

சிவபெருமான் உயிர்களுக்காக அருள்புரிந்த கதைகளைத் தேடிப் பெற்றுக் கூறுக.

# 2 பாடசாலையில் சைவம்



மாணவர்களை நல்ல உளப்பாங்குடன் வளர்க்கும் முகமாக நாயன்மார்கள், சமயப் பெரியார்களின் திருவுருவப்படங்கள், நீதிக்கருத்துக்கள் நிறைந்த வாக்கியங்கள், கருத்துரைகளுடன் கூடிய திருக்குறள்கள் போன்றவற்றை வகுப்பறைகளில் காட்சிப் படுத்துதல் உத்தமமானதாகும். கரும்பலகையில் தினசரி ஒரு திருக்குறளை எழுதுதல் சாலச் சிறந்ததொன்றாகும்.

நால்வர் குருபூசை, சமயப் பெரியார் குருபூசைத் தினங்களில் அவர்களுக்கு விசேட ஆராதனைகள் ஆற்றப்படுவதுடன் அவர்களின் வரலாறுகளையும், அவர்தம் தொண்டுகளையும், அவர்களின் செயற்கரிய செயல்களையும் மாணவர்கள் அறிந்து கொள்ளும் வகையில் சொற் பொழிவுகளாகவோ, நாடகங்களாகவோ, வில்லுப் பாட்டுக்களாகவோ நிகழ்த்துவது பயன்மிக்கதொன்றாக அமையும்.

நவராத்திரி விரதத்தின்போது விசேட வழிபாடுகள், கொலு வைத்தல் என்பன இடம்பெறும். இவ்விரதத்தின் போது பாடசாலை மாணவர்களிடையே பூமாலை கட்டுதல், கோலமிடுதல், பேச்சு, நாடகம், நடனம், கட்டுரை, பாவோதல் போன்ற போட்டிகள் இடம் பெறும். இப்போட்டிகளை நிகழ்த்துவதன் மூலம் எமது சமயப் பாரம்பரியங்களையும், விழுமியங்களையும் மாணவர்களிடையே விருத்தி செய்ய முடியும். நவராத்திரி விரதத்தின் பத்தாம் நாளாகிய விஜயதசமி அன்று, **'ஏடு தொடக்கல்'** நிகழ்வு இடம்பெறும்.அன்றைய தினம் புதிதாகக் கலைகளைக் கற்க உகந்த நாளாகக் கொள்ளப்படுகின்றது.

இவ்வகையில் நவராத்திரி காலம், மாணவர்களிடையே இறை பக்தியையும், கலைகளையும் வளர்க்க பெரிதும் உதவுகின்றது.

பாடசாலை நிறைவுறும் வேளையில் மாணவர்கள் வகுப்பறைகளில் அமைதியாக எழுந்துநின்று பயபக்தியுடன் திருமுறைகளை ஓதவேண்டும். அதன் பின்னர் ஒருவர்பின் ஒருவராக வரிசையாக அமைதியுடன் வகுப்பறைகளிலிருந்து வெளியே செல்லவேண்டும். இவ்விதம் நல்ல பண்புள்ளவர்களாகவும், நல்லொ ழுக்கம் மிக்கவர்களாகவும் திகழ மாணவர்கள் திடசங்கற்பம் பூணவேண்டும்.

மனிதன், வையத்துள் வாழ்வாங்கு வாழ வழிசமைத்துக் கொடுப்பது சமயமாகும். சமயம் என்பது மனித வாழ்வினை நெறிப்படுத்தி அழைத்துச் செல்லும் உன்னதமான பாதையாகும். அத்தகைய சிறந்த நற்பண்புள்ள மனிதர்களைத் தோற்றுவிக்கும் நிலையங்களாகத் திகழ்பவையே பாடசாலைகள் ஆகும். எனவே பாடசாலையில் சமய ஒழுக்கங்களும், சமயப் பாரம்பரியங்களும் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன.

மாணவர்கள் வைகறையில் துயிலெழுந்து, புறத்தூய்மைக்கு நீராடி, தோய்த்து உலர்ந்த ஆடையணிந்து, விபூதி தரித்து, உரிய நேரத்திற்கு முன்பாகவே பாடசாலைக்குச் சமுகமளிக்க வேண்டும். பாடசாலையின் சுற்றுப்புறச் சூழலைச் சுத்தமாக வைத்திருப்பது மாணவர்களின் கடமையாகும். தூய்மையே தெய்வீக அருளைத் தோற்றுவிக்கும். பாடசாலையில் பூமரக் கன்றுகளை நாட்டி, பசுமையாகப் பேணுவதுடன் மட்டுமல்லாது இறைவனுக்கும் அப்பூக்களைப் பறித்துச் சமர்ப்பணம் செய்யலாம்.



மிகவும் இரம்மியமான காலைப் பொழுதில் அதிபர், ஆசிரியர்கள், மாணவர்கள் அனைவரும் ஒன்று கூடித் தோத்திரப் பாடல்களைப் பண்ணுடன் இசைத்து மனமுருகி இறைவனைப் பிரார்த்தனை செய்தல் வேண்டும். மாணவர்கள் தோத்திரப் பாடல்களைப் பண்ணோடு இசைத்துப் பாடுவதன் மூலம் கோயில்களிலும் வேறு விசேட வைபவங்களின்போதும் அவற்றைப் பாடுவதற்கான இயலுமையை வளர்த்துக்கொள்ளக் கூடியதாக அமையும். தில்லைச்சிற்றம்பலத்தில் தேவாரத் திருவேடுகள் கிடைக்கப்பெற்றமையை உணர்த்தும் முகமாகத் திருமுறைப்பாடல்கள் ஓதப்படுவதற்கு முன்பும், ஓதிய பின்பும் **'திருச்சிற்றம்பலம்'** எனச் சொல்லுதல் இன்றியமையாததாகும். காலைப் பிரார்த்தனையின் பின்பு ஆசிரியர்களாலோ, மாணவர்களாலோ நற்சிந்தனை ஆற்றப்படுவது அனைவருக்கும் பயனுள்ளதொன்றாக அமையும்.

வெள்ளிக்கிழமை சைவசமயத்தவர்களின் முக்கிய புனித நாளாக விளங்குகின்றது. வெள்ளிக்கிழமைகளில் கோயில்களுக்குச் சென்று இறைவழிபாடு செய்வது உத்தமமானதாகும். பாடசாலைகளிலும் வெள்ளிக்கிழமைகளில் விசேட வழிபாடுகள் நிகழ்த்தப்படும். இத்தினத்தில் தினமும் ஓதப்படும் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருப்புராணம் என்னும் பஞ்சபுராணத் துடன் சிவபுராணமும் விசேடமாக ஓதப்படும்.



## பாடச் சுருக்கம்

- சமய ஒழுக்கங்களையும், சமயப் பாரம்பரியங்களையும் கற்றுக் கொடுக்கும் இடமாகப் பாடசாலை விளங்குகின்றது.
- காலைப் பிரார்த்தனையில் அனைவரும் பங்குகொண்டு வழிபாடு செய்தல் வேண்டும்.
- திருமுறைகளை ஓதுவதற்கு முன்பும், ஓதிய பின்பும் 'திருச்சிற்றம்பலம்' எனச் சொல்லுதல் வேண்டும்.
- மாணவர்கள் சைவசமய ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.
  மாணவர்கள் பாடசாலைகளில் நிகழும் சமய விழாக்களில் பங்குகொண்டு தங்கள் சமய அறிவையும் ஆளுமையையும் வளர்த்துக் கொள்ளவேண்டும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பாடசாலையில் கொண்டாடப்படும் சைவசமய விழாக்களைக் குறிப்பிடுக.

2. பாடசாலையில் சைவசமயத்தினை வளர்க்கும் முகமாகத் தினந்தோறும் நிகழ்த்தப்படும் நிகழ்வுகள் இரண்டு தருக.

3. 'திருச்சிற்றம்பலம்' சொல்லப்படும் சந்தர்ப்பங்களைத் தருக.

4. பாடசாலையில் கலைவிழாக்களைக் கொண்டாடுவதனால் மாணவர்கள் அடையும் நன்மைகள் எவை?

## செயற்பாடு

உமது பாடசாலையில் சைவசமயத்தை வளர்ப்பதற்காக மேற் கொள்ளப்படும் செயற்பாடுகளைப் பட்டியற் படுத்துக.

# 3 பாடசாலையில் ஒழுக்கம்



மாணவர்களுக்குக் கல்வியறிவைப் போதிப்பது மட்டும் பாடசாலைகளின் தொழிற்பாடன்று. மாணவர்களுக்கு பாடசாலைகளிலும் பாடசாலைகளுக்கு வெளியிலும் ஒழுக்கங்களைகடைப் பிடிக்க வேண்டும் எனப் போதிக்கும் நிலையங்களாக விளங்குபவைகளே, பாடசாலைகளாகும். பாடசாலையில் மேற்கொள்ளப்படும் செயற்பாடுகள் மாணவர்களின் வாழ்க்கையைப் பதப்படுத்தி வளப்படுத்துகின்றன. பாடசாலையில் கடைப்பிடிக்கப்படும் நல்லொழுக்கங்கள், மாணவர்கள் தம் வாழ்க்கையில் உன்னத நிலையை அடையத் துணைபுரிகின்றன.

பாடசாலைக்கு மாணவர்கள் உரிய நேரத்திற்குச் சமுகமளித்தல், அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்களில் ஒன்றாகும். காலைப் பிரார்த்தனையில் பங்குபற்றுவதுடன், அன்றைய தமது பாடங்களை ஆயத்தப்படுத்திக் கொள்ளவும் நேரத்திற்குப் பாடசாலைக்கு வருகை தருவது அவசியமாகின்றது. வகுப்பறையிலிருந்து பிரார்த்தனைக்குச் செல்லும் போதும், மீண்டும் வகுப்பறைக்கு வருகை தரும் போதும் வரிசையாக அமைதி பேணி பக்தி சிரத்தையுடன் இறைவழிபாடு இயற்றுதல் சிறந்த ஒழுக்கமாகும்.



பாடசாலையில் அதிபர், ஆசிரியர்களுக்குக் கீழ்ப்படிந்து பணிவாக நடந்து கொள்ள வேண்டும். ஆசிரியர் வகுப்பறைக்கு வருகை தரும் போதும், வகுப்பறை யிலிருந்து வெளியேறும் போதும் அனைவரும் எழுந்து நின்று அவருக்கு வணக்கம் செலுத்துதல் வேண்டும். ஆசிரியர் சொற்படி நடந்துகொள்ள வேண்டும். பாட வேளையின் போது சக மாணவர்களுடன் கதைத்துப் பேசிக்கொண்டு இருக்காமல், ஆசிரியர் கற்பிப்பவற்றை அவதானமாகச் செவிமடுக்க வேண்டும்.

சந்தேகங்கள் ஏற்படும் சந்தர்ப்பத்தில் ஆசிரியர் கற்பிப்பதற்கு இடையூறு ஏற்படுத்தாமல் தங்கள் முறை வரும் வரையில் காத்திருந்து எழுந்து நின்று ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். பாடப் பரப்பிற்குப் பொருத்தமற்ற வினாக்களை எழுப்பி ஆசிரியரையும், ஏனைய மாணவர்களையும் வீண்சிரமத்திற்கும், காலவிரயத்திற்கும் உட்படுத்தாமல் நடந்துகொள்ள வேண்டும்.

மாணவர்கள் ஏனைய சகமாணவர்களுடனும், மாணவ தலைவர் களுடனும் நட்புடன் நடந்துகொள்ள வேண்டும். மாணவ தலைவர்களாக விளங்கும் மாணவர்கள், பண்புடனும், அமைதியுடனும், அன்புடனும் மாணவர்களை நல்வழிப்படுத்த வேண்டும். அத்துடன் பாடசாலையில் பணிபுரியும் ஊழியர்களுடனும் அன்பாகவும், பண்பாகவும் பழகிக் கொள்ள வேண்டும். பாடசாலை நிறைவுறும் வேளையில் அமைதியாக எழுந்துநின்று, திருமுறை ஓதிய பின்னர் வரிசையாக வகுப்பறையிலிருந்து வெளியே செல்லவேண்டும்.

பாடசாலை என்பது ஒரு கோயிலாகும். அதனையும் அதன் சுற்றுப்புறச் சூழலையும் சுத்தமாகப் பேணிக் காப்பது மாணவர்களின் கடமையாகும். தூய்மை யான இடத்தில் இறைவன் குடிகொள்வான். எனவே, அத்தகைய இறைவன் உறையும் இடத்தில் நாம் பண்பாகவும் பணிவுடனும் நடக்கப் பழகிக்கொள்ள வேண்டும். எரிச்சல், பொறாமை போன்ற தீய குணங்களை விலக்கி, அன்பும், பண்பும், பணிவும் நிறைந்த மாணவர்களாக விளங்க வேண்டும். இதன் மூலம் நல்லொழுக்கம் மிக்க மனிதர்களாக நாம் திகழமுடியும்.



## பாடச் சுருக்கம்

- ❑ மாணவர்களுக்கு ஒழுக்கங்களைப் போதிக்கும் நிலையமாக பாடசாலை விளங்குகின்றது.
- ❑ மாணவர்கள் பாடசாலைக்கு உரிய நேரத்திற்குச் சமூகமளித்தல் அவசியம்.
- ❑ பாடசாலையில் அதிபர், ஆசிரியர்கள், சகமாணவர்கள், ஊழியர்கள் அனைவருக்கும் மதிப்பளித்தல் நற்பண்பாகும்.
- ❑ பாடசாலையையும், அதன் சுற்றுப்புறச் சூழலையும் சுத்தமாகப் பேணிக் காப்பது மாணவர்களின் கடமையாகும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பாடசாலை ஆரம்பமானவுடன் நடைபெறும் முக்கிய நிகழ்வுகள் இரண்டினைத் தருக.
2. பாடசாலை நிறைவுறும் வேளையில் மாணவர் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்கள் யாவை ?
3. மாணவர்கள் பாடசாலையில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்களைப் பட்டியற்படுத்துக.

## செயற்பாடு

**'பாடசாலையில் மாணவர் ஒழுக்கம்'** எனும் தலைப்பில் பேச்சு ஒன்றினை நிகழ்த்துக.

# 4 வாழ்வியல் நற்பண்புகள்

மனித வாழ்வு மிக எளிமையான தன்மையையும், உயர்வான எண்ணங்களையும் கொண்டதாக அமைய வேண்டும். மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் தன்னுயிர் போல் மன்னுயிரையும் பேணி, வாழும் வாழ்வே சிறந்தது. நாம் எமது வாழ்வில் போற்றி வளர்க்க வேண்டிய உயர்ந்த பெறுமதி மிக்க நற்பண்புகள் பலவுள்ளன. இவையாவும் மனிதனை மனிதனாக வாழவைப்பன. பணிவு, நன்றி மறவாமை, நீதி, பொறுமை, சகோதரத்துவம், பஞ்சமா பாதகங்களைத் தவிர்த்தல் போன்றவை வாழ்வியல் நற்பண்புகளாகக் கருதப்படுகின்றன. அவற்றை இங்கு நாம் கற்போம்.

## (அ) பணிவு

மனிதனுடைய நற்குணங்களில் நனி சிறந்து விளங்குவது பணிவுடைமை ஆகும். கல்வி, செல்வம், பட்டம், பதவி முதலியன இருப்பினும், பணிவு என்ற பண்பு இல்லையானால் அவற்றினால் பயனெதுவுமில்லை.

**“பணியுமாம் என்றும் பெருமை சிறுமை**
**அணியுமாம் தன்னை வியந்து”**

என்பது வள்ளுவர் வாக்கு.

எனினும், பணிவு எனும் பண்பு இன்று எம்மில் அநேகருக்கு அருகி வருகின்றது. இதற்கு முக்கிய காரணம் எமது அறியாமையே ஆகும். அறியாமையால் எமது உள்ளத்தில் அகங்காரம் வளர்கின்றது. அகங்காரம் இருக்கும் வரையில் பணிவு எனும் விழுமியப்பண்பை எம்மால் பெறுதல் இயலாது. எனவே அகங்காரத்தை நீக்கி, எல்லோருக்கும் பணிதல் நன்றாம் என்பதற்கிணங்க பணிவு எனும் பண்பினை எம் வாழ்வில் கடைப்பிடித்து உயர்நிலை பெறுவோம்.

இனி, பணிவு எனும் பண்பினை எடுத்துக்காட்டும் கதை ஒன்றினை இங்கு கற்போம். முன்னொரு காலத்தில் அடர்ந்த காடு ஒன்று இருந்தது. அந்தக் காட்டின் நடுவிலே முனிவர் ஒருவர் வசித்து வந்தார். அவருக்கென்று ஓர் ஆச்சிரமம் இருந்தது. அந்த ஆச்சிரமத்தில் தங்கி மாணவர்கள் கல்வி பயின்று வந்தார்கள். அந்த முனிவர் தம்மிடம் கல்வி கற்பவர்களிடையே எந்த ஏற்றத் தாழ்வையும் காணவில்லை. ஜாதி, மதம், குலம், வறுமை, வளமை ஆகிய எதையும் பார்க்காதவராக இருந்தார்.

அந்தக் காட்டை ஒட்டியிருந்த நாட்டின் மன்னனுக்கு ஒரு மகன் இருந்தான். அவனும் அதே குருகுலத்திலேயே தங்கிக் கல்வி கற்று வந்தான். கல்வி கற்றுத் தேர்ந்தவர்களை மட்டும் **''உனக்கு குருகுலப்படிப்பு முடிந்தது. நீ போகலாம்''** என்பார் முனிவர். அவர்களும் விடைபெற்றுச் செல்வர். முனிவர் சொல்லாமல் யாரும் குருகுலத்தை விட்டுச் செல்லக் கூடாது.

ஒரு நாள் தன்னிடம் கல்வி பயின்று தேர்ந்த மாணவர்களை எல்லாம் அவர் வீட்டிற்கு விடை கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தார். ஆனால் அந்த இராஜகுமாரனை மட்டும் அவர் அனுப்பவே இல்லை. இந்த விடயம் அரசனுக்குத் தெரிய வந்தது. அரசன் நீண்ட நாட்கள் பொறுத்தான். ஆயினும் முனிவர் இராஜகுமாரனை மட்டும் அனுப்பவே இல்லை.

அரசன் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டு, ஒரு நாள் புறப்பட்டு வந்தான். அவனை முனிவர் அன்புடன் வரவேற்றார். முனிவரை வணங்கினான். அரசன் மெல்லிய குரலில் கூறினான். ''சுவாமி, தங்களிடம் கல்வி பயின்ற எல்லா மாணவரையும் வீட்டிற்கு அனுப்பி வைத்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன். ஆனால் என் மகனை மட்டும் அனுப்பாமல் வைத்திருப்பதற்குக் காரணம் என்ன? அவனுக்குத் தாங்கள் எதிர்பார்த்தது போல் கல்வி ஏறவில்லையா? அல்லது வேறு ஏதாவது காரணம் உண்டா?'' என்று வினவினான்.

அரசன் கேட்டதற்கு முனிவர் பதில் ஏதும் கூற வில்லை. நீங்கள் இங்கே சில நாட்கள் தங்கி இருங்கள் என்றார். முனிவரின் கட்டளையை மீற முடியாமல் மன்னன் அங்கேயே தங்கினான்.

இரண்டொரு நாட்கள் ஆயின. ஒரு நாள் காலையில் அரசன் எழுந்து பார்த்தான். அப்போது எவனோ ஒருவன் விறகைச் சுமந்து கொண்டு ஆச்சிரமத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவனை உற்றுப்பார்த்த மன்னன் திடுக்கிட்டான். அது அவனுடைய மகன் தான். நாட்டை ஆள வேண்டிய தன் மகன் விறகு சுமக்கின்றானே என, மிக வருந்தினான். விறகைச் சுமந்து வந்த மாணவனும் முனிவரைப் பார்த்து ''**சுவாமி, என் அடுத்த பணி என்ன**?'' என்று கேட்டான். ''**நம் ஆச்சிரமத்துக்கு முக்கிய விருந்தாளி வந்துள்ளார். அவருடைய இடத்தை சுத்தம் செய், வாசல் தெளி, கோலம் இடு என்றார்**'' குரு.

இளவரசன் துடைப்பத்தை எடுத்துக்கொண்டு அரசன் தங்கியுள்ள இடத்தை அடைந்து தனது கடமையைச் செய்ய முயன்றான். அரசன் மேலும் திடுக்கிட்டான். செங்கோல் ஏந்த வேண்டிய கை துடைப்பத்தை ஏந்துவதா? ''**மகனே துடைப்பத்தைக் கீழே போடு**'' என உத்தரவிட்டார் தந்தை.

இராஜகுமாரன் அமைதியாக ஏறிட்டுப் பார்த்தான். ''**அரசே இப்போது தாங்கள் எங்கள் குருநாதரின் விருந்தினர். அதன் பின் தான் என் தந்தை. இப்போது இந்தப்பணியைச் செய்யச் சொன்னது, என் குருவின் கட்டளை. அதனை மீறமாட்டேன். இங்கே என் குருவுக்கு நான் மாணவன். அவர் சொல்தான் வேதம். அவர்தான் என் இறைவன். எனவே தங்களைப் போன்ற அரசரும், ஆண்டியும் இங்கே ஒன்றுதான்**'' என்றான். அப்போது அங்கே வந்த அந்த முனிவர், அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார். பிறகு அரசனிடம் கூறினார்.

''**அரசே, உங்கள் மகனுக்கு எல்லாப் பாடங்களும் நன்றாகத் தெரியும். இங்கே கற்ற மற்ற மாணவர்களில் இவன்தான் முதல்வன். அப்படி யார் ஒருவன் முதலாவதாக வருகின்றானோ அவனை மீண்டும் இறுதிப் பரிசோதனை செய்வேன். அதில் தேறினால்தான் அவனை வீட்டிற்கு அனுப்புவேன். அவனுக்கு உலக அரங்கில் மதிப்பும் மரியாதையும் கிட்டும்**'' என்றார்.

அரசே, இந்த இராஜகுமாரன் நான் வைத்த பரிசோதனையில் வெற்றி அடைந்து விட்டான். எப்படித் தெரியுமா? உலகிலே சிறந்த குணம் எதுவென்றால் பணிவுதான். அந்தப்பணிவு ஒருவனுக்கு இயற்கையாக வாய்த்துவிட்டதென்றால், அவனை யாரும் அசைக்க முடியாது.

நான் அவனுடைய குரு. நான் சொல்வது ஒருவேளை அவனுக்குப் பிடிக்காமல் கூட இருக்கலாம். இருந்தாலும் நான் சொல்வதை அவன் செய்து கொண்டே வந்தால் எது சரி? எது தவறு? என்று பிரித்துப் பார்க்கக் கூடிய குணம் அமைந்து விடும். அதை விவேகம் என்று கூறுவர். பணிவு என்றும் சொல்லலாம். அவர்களை யாரும் சலனப்படுத்தி விட முடியாது. அது அவனுக்கு மன உறுதியை உண்டாக்கும். அவ்வாறான மன உறுதியை அவன் பெற்றுவிட்டான். இனி நீங்கள் அவனை அழைத்துச் செல்லலாம். அவன் பெயரும் புகழும் திக்கெட்டும் பரவும், என்று முனிவர் கூறினார். அரசன் மெய் சிலிர்க்க முனிவரின் கால்களில் விழுந்தான். அதன் பின் அவன் தன் மகனுடன் நாடு திரும்பினான்.

**''பணியுமாம் என்றும் பெருமை''**

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நாம் கடைப்பிடிக்க வேண்டிய வாழ்வியல் பண்புகள் சிலவற்றைத் தருக.
2. பணிவு பற்றித் திருவள்ளுவர் கூறும் குறள் ஒன்றினை எழுதுக.
3. முனிவரின் ஆச்சிரமத்தில் அரசன் மனம் வருந்தியமைக்கான காரணம் யாது?
4. அரசன் ஆச்சிரமத்தில் தங்கியிருந்த பொழுது முனிவரால் இராஜகுமாரனுக்கு இடப்பட்ட கட்டளைகள் யாவை?

## (ஆ) நன்றி மறவாமை

இவ்வுலகில் மக்கள் செம்மையாக வாழ்வதற்கு நன்றி மறவாமை எனும் மனிதப் பண்பு பேணப்பட வேண்டியது அவசியமாகின்றது. இதனாலேயே திருவள்ளுவர்,

**''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு''**

என்கின்றார்.

எமது சைவ இலக்கியங்கள், புராண இதிகாசங்கள் அனைத்தும் நன்றி மறவாமை எனும் உயர் பண்பினை எடுத்து விளக்கியுள்ளன. நாம் இறைவனுக்கும், எமது முன்னறி தெய்வங்களாக விளங்குகின்ற தாய் தந்தையர்க்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். **''உப்பிட்டவரை உள்ளளவும் நினை''**, **''உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யாதே''**, **''தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாகக் கொள்வர்''**, **''காலத்தினாற் செய்த நன்றி ஞாலத்தில் மாணப் பெரிது''** என்ற கூற்றுக்கள் சைவ மக்களால் உணரப்பட்டு வந்துள்ளன. எமது வாழ்வின் மேம்பாட்டிற்காக உதவிகள் பலவற்றைச் செய்கின்ற ஆசிரியர்கள், பெரியோர்கள் ஆகியோரை மதித்து வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். இது நாம் அவர்களுக்குச் செய்யும் நன்றியாகும். நன்றி மறவாமை எனும் பண்பிற்கு கர்ணன், கும்பகர்ணன் போன்றோர் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றனர்.

**''நன்றி மறப்பது நன்றன்று''**

## பாடச் சுருக்கம்

- நன்றி மறத்தல் நன்றன்று.
- ஒருவர் செய்த உதவிக்கு நாம் கட்டாயமாக நன்றி பாராட்ட வேண்டும்.
- கர்ணன், கும்பகர்ணன் ஆகியோர் நன்றி மறவாமை எனும் பண்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றனர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நன்றி மறவாமை எனும் பண்பினை உணர்த்தும் திருக்குறள் ஒன்றினை எழுதுக.
2. நன்றி மறவாப் பண்பிற்கு எடுத்துக்காட்டாக விளங்கிய இருவர் பெயர்களைத் தருக.

## செயற்பாடு

இராமாயணத்தில் இடம்பெற்ற கும்பகர்ணன் எனும் கதாபாத்திரத்தின் பண்பு களைத் தொகுத்துத் தருக.

## (இ) நீதி, நேர்மை

"**மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்**" எனக் கச்சியப்ப சிவாசாரியார், கந்தபுராணத்தில் பாடியுள்ளார். தன்னுயிர் போல் மன்னுயிரையும் ஓம்பும் வாழ்வு சைவநீதி. நீதி என்றால் என்ன? எனும் வினா எமக்குள் எழலாம். நமக்கு எது துன்பம் என்று தோன்றுகின்றதோ அதனைப் பிறருக்கு நாம் செய்யக் கூடாது. அதுவே நீதி. சிவபெருமான் நீதியே வடிவமானவர். "**மாலும் அயனும் காணாத நீதியே**" என சிவபெருமானை மணிவாசகப்பெருமான் குறிப்பிடுகின்றார். நீதி இந்தப் பிரபஞ்சம் முழுதும் செறிந்து காணப்படுகிறது. ஆனாலும், அந்நீதி எல்லோர் கண்களுக்கும் எளிதில் புலப்பட மாட்டாது. "**நான், எனது**" என்ற மமகார உணர்வுகள் இருப்பவர்களுக்கு அந்நீதி புலப்படாது. ஒவ்வொருவரும் எந்தளவிற்கு நீதியைச் சார்ந்து நிற்கின்றனரோ, அந்த அளவிற்குக் கடவுளைச் சார்ந்திருப்பவர் ஆவார். எனவே, நாம் அன்புள்ளவராகவும், பண்புள்ளவராகவும் நீதிநெறியில் நின்று வாழ்ந்தால் இறையருளைப் பெறமுடியும் என்பதனை மனுநீதி கண்ட சோழன் போன்றோர் வாழ்விலிருந்து அறிந்து கொள்ளலாம்.

சோழவள நாட்டை அநபாயச்சோழன் என்பவன் அரசாண்டு வந்தான். அவன் திருவாரூரைத் தலைநகராகக் கொண்டிருந்தான். அவன் தனது ஆட்சியின் திறமையால் மனுநீதி என்ற பெயரையும் தனதாக்கிக் கொண்டான். அவ்வேந்தனுக்கு நீண்ட நாட்களின் பின்பு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு வீதிவிடங்கன் எனப் பெயரிட்டான். வீதி விடங்கன் வளர்பிறை போல் வளர்ந்து, கல்வி கற்று, அரசர்க்குரிய படைக்கலப் பயிற்சி, யானையேற்றம் முதலானவற்றையும் நன்கு கற்று உணர்ந்தான்.

ஒருநாள் வீதிவிடங்கன் மணிநெடுந்தேர் மேல் ஏறிக்கொண்டு, நண்பர்களின் தேர்கள் புடைசூழ்ந்து வர வீதியுலாச் சென்றான். அவ்வேளையில் எங்கிருந்தோ ஒரு பசுக்கன்று துள்ளிக்குதித்தோடி வந்து அரசிளங்குமாரனது தேர்ச்சக்கரத்தின் அடியில்

அகப்பட்டு இறந்தது. அதனைக்கண்ட தாய்ப்பசு அலறிற்று. இளவரசன் தேரைவிட்டு இறங்கி செய்வதறியாது திகைத்தான்.

இந்நிலையில் தாய்ப்பசு அரண்மனைக்குச் சென்று, வாயிலில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த, இதுவரை அடிக்கப்படாமல் தூங்கிக் கொண்டிருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்புகளால் அசைத்தது. அந்த மணியோசை மன்னன் காதில் விழுந்ததும் அரியணையை விட்டெழுந்து அரண்மனை வாயிலுக்குச் சென்ற மன்னன் கதறுகின்ற பசுவை நோக்கினான். மன்னனுடன் இருந்த அமைச்சர்கள் நடந்தவற்றைக் கூறினர். அவ்வுரை கேட்ட வேந்தன் இரங்கி வருந்தினான். ஏங்கினான். அரசனது துயர்நிலையைக் கண்ட அமைச்சர்கள் எவ்வளவோ ஆறுதல் மொழிகளைக் கூறினர்.

கோவதையால் ஏற்பட்ட பழிக்குச் செய்ய வேண்டிய பிராயச்சித்தங்களை அமைச்சர்கள் கூறினர். ஆனால் அரசனோ அதற்குச் சம்மதிக்கவில்லை. இப்பசு தன் கன்றை இழந்து தவிப்பது போல நானும் எனது ஒரே மகனை இழப்பதுதான், இப்பசுக் கன்றுக் கொலைக்கு நீதி, முறையாகும் என அரசன் தீர்மானித்தான். உடனே அமைச்சர் ஒருவரை அழைத்து பசுக்கன்று இறந்த அதே வீதியில் இளவரசரைப் படுக்கச் செய்து, அவன் மேல் தேரினைச் செலுத்தும்படி கட்டளையிட்டான். அமைச்சரோ அவ்வாறு செய்யாது தனது உயிரைப் போக்கினார். நீதி நிலைக்க வேண்டும் என்பதற்காக மன்னன் தன் ஒரே மகனை பசுக்கன்று இறந்த அதே வீதியில் படுக்கச் செய்து, இளவரசனின் மலை போன்ற மார்பில் தேரினைத் தானே செலுத்தினான். நீதியைக் காப்பாற்ற அரசன் எடுத்த தீர்மானம் எம்பெருமானையே அங்கு எழுந்தருளச் செய்துவிட்டது. பின்னர் இறையருளால் அரசிளங்குமாரனும், அமைச்சரும் உயிர்ப் பெற்றெழுந்தனர். பசுக் கன்றும் உயிர் பெற்று எழுந்தது.

**"மேன்மைகொள் சைவநீதி"**

**பாடச் சுருக்கம்**

- ❑ தன்னுயிர் போல் மன்னுயிரையும் ஓம்பும் வாழ்வு சைவநீதி ஆகும்.
- ❑ நாம் நீதிநெறி நின்று வாழ்ந்தால் இறையருளைப் பெறலாம்.
- ❑ மனுநீதி கண்டசோழன் கதை நீதி, நேர்மையை எடுத்துக் காட்டுகின்றது.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. மாலும் அயனும் காணாத நீதியாக விளங்குபவர் யார்?
2. நாம் நீதிநெறியில் வாழ்வதன் மூலம் எதனைப் பெறலாம்?
3. மனுநீதி கண்ட சோழன் என்ற பெயரையுடைய மன்னன் யார்?
4. அரசிளங்குமாரனின் பெயர் யாது?
5. கந்தபுராணத்தின் ஆசிரியர் யார்?

## செயற்பாடு

நீதி, நேர்மை என்பவற்றை உணர்த்தும் கதைகளைச் சேகரியுங்கள்.

## (ஈ) பொறுமை

மானிடப் பிறவி பெற்ற நாம், பொறுமை எனும் உத்தம பண்பை வாழ்வில் கடைப்பிடிக்கப் பழகிக்கொள்ள வேண்டும். பொறுமையுடன் செயற்பட்டோர்க்கு வெற்றியும் உயர்ந்த வாழ்வும் கிடைக்கும் என்பது உறுதி. சைவசமயத்தைப் பரப்ப விழைந்த திருநாவுக்கரசருக்கும், திருஞானசம்பந்தருக்கும் பகைவர்கள் பல தீமைகளைச் செய்தனர். எனினும் அந்த இரு அருளாளர்களும் இத்தீமைகளைப் பொறுத்து மிகுந்த பொறுமையுடையவர்களாகத் திகழ்ந்தனர். இறையருளை நம்பினர். மகாபாரதத்தில் வரும் தருமன் பொறுமைக்குச் சிறந்த உதாரணமாகத் திகழ்ந்தான்.

இனி, பொறுமை பற்றிய சிறிய கதையொன்றினை இங்கு கற்போம்.

ஏகநாதர் என்ற அடியார் எல்லோராலும் போற்றப்பட்டார். அதைக் கண்டு பொறாமை கொண்ட ஒருவன், அவரை அவமானப்படுத்த வேண்டும் என்று நினைத் தான். ஒருநாள் விடியற்காலையில் ஏகநாதர் வழக்கம்போல் கோதாவரி நதியில் நீராடிவிட்டு ஈர உடையுடன் வீதி வழியாக வந்து கொண்டிருந்தார். தன் வீட்டருகே

வந்ததும் மாடியில் இருந்தபடியே எச்சிலை அவர் மீது உமிழ்ந்தான். ஏகநாதர் கோபம் கொள்ளாமல் மறுபடியும் நதிக்குச் சென்று நீராடி விட்டு வந்தார். அவன் மீண்டும் அவர் தலையில் உமிழ்ந்தான். மீண்டும் மீண்டும் இது தொடர்ந்தது. இத்தனை முறை தலையில் எச்சிலை உமிழ்ந்தும் ஏகநாதர் தன் மீது சினங்கொள்ளவில்லையே என்று நினைத்த அவன், ஏகநாதரின் காலில் விழுந்து தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். அவன் உள்ளம் திருந்திவிட்டதை உணர்ந்த ஏகநாதர், "**அன்பனே! நீ முதலில் உன் அழுகையை நிறுத்து. நீ எனக்கு எந்தத் தீமையும் செய்யவில்லை. மாறாக நன்மையே செய்திருக்கின்றாய். உன் உதவியால் புனித நதியான கோதாவரியில் ஒரே நாளில் நூற்றியெட்டு முறை நீராடும் பேறு எனக்குக் கிடைத்தது. இத்தகைய பேறு யாருக்குக் கிடைக்கும்**" என்றார்.

**"பொறுத்தார் பூமி ஆள்வார்"**

## பாடச் சுருக்கம்

- மானிடராகிய நாம் பொறுமை எனும் உத்தம பண்பை வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும்.
- பொறுமையைக் கடைப்பிடித்தால் வெற்றியைப் பெறலாம்.
- எந்தவொரு சந்தர்ப்பத்திலும் பொறுமையை இழக்கக்கூடாது.
- ஏகநாதர் பொறுமையைக் கடைப்பிடித்ததால் புனித நதியான கோதாவரியில் ஒரே நாளில் நூற்றியெட்டு முறை நீராடும் பேற்றினைப் பெற்றார்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பொறுமையைக் கடைப்பிடிப்பதால் ஏற்படும் இரு நன்மைகளைத் தருக.
2. பொறுமையுடன் வாழ்ந்த அருளாளர்கள் இருவரைக் குறிப்பிடுக.
3. இப்பாடத்தில் வருகின்ற புனித நதியின் பெயர் யாது?
4. ஏகநாதருக்குத் தீங்கு செய்தவன் உள்ளம் திருந்தக் காரணம் யாது?
5. ஏகநாதரின் குணப்பண்பு யாது?

## செயற்பாடு

நீங்கள் பொறுமை காத்த சந்தர்ப்பங்களையும், அதனால் நீங்கள் பெற்ற நன்மைகளையும் கூறுங்கள்.

## (உ) சகோதரத்துவம்



மனித வாழ்வு செம்மையாகவும், ஒழுக்கமுள்ளதாகவும், அமைதி நிறைந்த தாகவும் அமையவேண்டுமெனின் நாம் விழுமியப்பண்புகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். அவற்றுள் சகோதரத்துவமும் ஒன்றாகும். நாம் ஐக்கியமாகவும், ஒருவரை யொருவர் ஏற்றத்தாழ்வின்றி மதிக்கும் போதும், அன்பினைப் பேணும் போதும் அங்கே சகோதரத்துவம் மிளர்கின்றது. இதற்கு இராமன் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றான்.

நாட்டைத்துறந்து, மரவுரி தரித்து, தனது தேவியுடனும், தம்பி இலக்குவனோடும் பதினான்கு வருடங்கள் வனவாசஞ் செய்யக் காட்டிற்கு இராமன் புறப்பட்டான். செல்லும் வழியில் வேடுவத் தலைவனாகிய குகனைச் சந்திக்கின்றான். இராமனையே போற்றி வாழ்ந்த குகன் இராமனின் தரிசனம் கிடைத்ததும் அதனை உயர்பேறாகக் கருதினான். இராமனுக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்து மகிழ்ந்தான். குகனின் பேரன்பைப் புரிந்த இராமனும் குகனைப் பார்த்து, "**இனி நாம் ஐவரானோம்**",

என்று கூறி சகோதரத்துவப் பண்பை உணர்த்துகின்றான். அதேசமயத்தில் வானர குலத்தலைவன் சுக்ரீவனை இராமன் தன் தந்தைக்கு, இவனும் ஒரு மகன் எனக் கொண்டாடுகின்றான். அரசகுலத்தில் பிறந்த இராமன் தன் வாழ்வில் உயர்வு தாழ்வு பார்க்காத உத்தமன். இத்தகைய அன்பு உள்ளம் கொண்ட இராமன் சகோதரத்துவத்தின் மேன்மையையும், சிறப்பையும் விளக்கும் உயர் எடுத்துக் காட்டாக விளங்குகின்றான். நாம் இப்பண்பினைப் பின்பற்றி உயர்நிலை அடைவோமாக.

## (ஊ) பஞ்ச மாபாதகங்களைத் தவிர்த்தல்

சைவநெறி பஞ்ச மாபாதகங்களாக கொலை, களவு, கள் உண்ணல், பொய், காமம் ஆகியவற்றைக் குறிப்பிட்டு அவற்றில் மக்கள் ஈடுபடுதல் ஆகாது எனக் கூறுகிறது. இவற்றைத் தீவினைகள் என்றும், ஒவ்வொரு சைவனும் இத்தீவினைகளைச் செய்வதற்கு அஞ்ச வேண்டும் என்றும் சைவநெறி கூறுகின்றது. பஞ்ச மாபாதகங்களைச் செய்வதால் பிறவிகள் தோறும் தீய பயன்களை அனுபவிக்க நேரும். நாம் செய்யும் செயல்கள், சிந்தனை அனைத்தையும் எங்குமுள்ள இறைவன் கண்காணிக்கின்றான். இந்த உண்மையை உணர்ந்து கடவுள் மீது பக்தி கொண்டோர் தீவினைகளைத் தவிர்க்கும் ஆற்றலைப் பெறுகின்றனர். எனவே, ஒவ்வொருவரும் அறநெறி நின்று, ஒழுக்க சீலர்களாக சமுதாயத்தில் வாழ்தல் மூலமே வாழ்வில் எதிர்நோக்கும் துன்பங்கள், துயரங்களைத் தவிர்க்க முடியும் என்பது சைவத்தின் முடிந்த முடிபாகும். எனவே பஞ்ச மாபாதகங்களைத் தவிர்ப்போம். நல்வாழ்க்கை வாழ்வோம்.

## பாடச் சுருக்கம்

- எல்லோரையும் சகோதர உணர்வுடன் போற்றுதல் வேண்டும்.
- இராமர் குகனையும், சுக்ரீவனையும் தமது சகோதரர்களாக ஏற்றுக் கொண்டமை சகோதரத்துவத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.
- நாம் வாழ்வில் பஞ்ச மாபாதகங்களைத் தவிர்த்து வாழ்தல் வேண்டும்.
- நாம் ஒவ்வொருவரும் அறநெறி நின்று ஒழுக்க சீலர்களாக வாழ்தல் வேண்டும்.
- நாம் கடவுள் மீது பக்தி கொண்டோராக வாழ்தல் வேண்டும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சகோதரத்துவம் எனும் பண்பினை எடுத்துக்காட்டும் கதாபாத்திரங்களின் பெயர்களைக் கூறுக.
2. பஞ்ச மாபாதகங்கள் எவை?
3. பஞ்ச மாபாதகங்களைச் செய்வதன் மூலம் ஏற்படும் தீமைகள் யாவை?
4. கடவுள் மீது பக்தி கொண்டோர் அடையும் நன்மை யாது?
5. வாழ்வில் எதிர்கொள்ளும் துன்பங்களைத் தவிர்க்க நாம் எவ்வாறு வாழ்தல் வேண்டும்?

## செயற்பாடு

மாணவர் குழுவாகச் செயற்பட்டு, சகோதரத்துவத்தை உணர்த்தும் சிறிய கதைகளை ஆக்கவும்.

# 5 புதுமனை புகுதல்



சமுதாய அமைப்பிலே வீடொன்றைக் கட்டி வாழ்வாங்கு வாழ வேண்டும் என்ற எதிர்பார்ப்பு மக்களிடத்தில் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றது. அவ்விதம் வீடொன்றைக் கட்டுவதற்குத் தகுந்த இடத்தைத் தெரிவு செய்தல், அத்திபாரமிடல், பொருத்தமான முறையில் மனையை அமைத்தல் போன்ற பணிகளை **'மனையடி சாஸ்திரம்'** கூறும் விதிகளுக்கமைய அமைத்தல் சாலச்சிறந்ததாகும். வீட்டின் கட்டுமானப் பணிகள் பூர்த்தியானதும், சுப நாளில், சுப முகூர்த்தத்தில் குடிபுகும் மங்கள நிகழ்வே **புதுமனை புகுதல்** ஆகும். இதனையே கிருஹப்பிரவேசம் என்றும் கூறுவர்.

வீடு கட்டும்போது அதற்கான அத்திபாரத்தை அமைப்பது முக்கிய நிகழ்வாக

அமைகின்றது. இதற்கென புண்ணிய இடங்களாக விளங்கும் ஆலயங்களின் வீதிமண், மலைமண், ஆற்று மண், புற்றுமண், யானைத் தந்தத்தால் எடுத்த மண், காளைக் கொம்புமண், குளத்துமண் போன்றவற்றை எடுத்துக் குழைத்துப் பெட்டி போல் அமைத்து, அடிப் பேழையில் பள்ளம் அமைத்து, அதற்குள் நவரத்தினம், நவதானியம், சிறுதானியங்கள், அட்சரம் எழுதிய செப்புத்தகடு, வெள்ளி, தங்கத் தகடுகள், நாணயங்கள் போன்றவற்றை வைத்துக் குறித்த நிலத்தின் ஈசான மூலையில் அதனைத் தாபித்துப் பூஜைகள் செய்வர்.

அதன் பின்னர் வீட்டின் கட்டுமானப் பணிகள் ஓரளவு நிறைவெய்தும் தறுவாயில், சுப முகூர்த்த வேளையில் நிலை வைத்தல், வளை வைத்தல் போன்ற மங்கள நிகழ்வுகள் நடைபெறும். இதன் போது தச்சுவேலை செய்யும் பணியாளர் களுக்கு உடை, தட்சிணை, தாம்பூலம் என்பவற்றைக் கொடுத்து உபசரிப்பர்.

வீட்டின் அனைத்துப் பணிகளும் நிறைவெய்தியதன் பின்னர் குறித்த சுப தினத்தில் கிருஹப்பிரவேசம் என்னும் மங்கள வைபவம் நிகழும். கிருஹப் பிரவேச தினத்திற்கு முதல்நாள் பசுவைக் குறித்த வீட்டில் தங்கவைப்பர். கிருஹப் பிரவேசத் தின் போது கோமாதாவால் வரவேற்கப்படுகையில் அஷ்ட ஐஸ்வர்யங்களும் கிட்டும் என்பது ஐதீகம். அத்துடன் சிவாச்சாரியர் மூலம் கிருஹசாந்தி இடம்பெறும். இதன் போது வாஸ்துசாந்தி பூஜை நிகழும். ஹோமம் செய்யும் வேளையில் வாஸ்துபுருஷன் எவ்வித இடையூறும் நிகழ்த்தாமல் இருக்க, தேவர்களையும் பிரம்மாவையும் பூஜை என்பவற்றால் திருப்தி செய்வதே வாஸ்து சாந்தியின் நோக்கமாகும். இதனைத் தொடர்ந்து விநாயகர், இலக்குமி, நவக்கிரகங்களுக்கு கும்பங்கள் வைத்துப் பூஜை வழிபாடுகள் இயற்றி, அக்கும்பங்களின் நீரால் வீட்டு அங்கத்தவர்கள் நீராட்டப்படுவர். மேலும் வீட்டைச் சுற்றிலும் எட்டுத் திக்குகளிலும் சங்குகளைப் பதித்துக் காவல் செய்யப்படும்.

கிருஹப்பிரவேச தினத்தன்று கோயிலில் பூஜை செய்யப்பட்ட சுவாமிப் படங்கள், நிறைகுடம், விளக்கு, நிறைநாழி, தாம்பூலத்தட்டு, தேங்காய், உப்பு, மஞ்சள், கற்கண்டு போன்ற மங்கலப் பொருள்களுடன் வீட்டினுள் நுழைவர். அதன் பின்னர் பால் காய்ச்சி பொங்கல் வைத்து சுவாமிப் படங்களுக்கு நிவேதனம் செய்து பூஜை வழிபாடுகள் நிகழ்த்துவர். இறைவனை வணங்கியதன் பின்னர் வீட்டுப் பெரியோர் களிடம் ஆசீர்வாதம் பெற்று இன்புறுவர். அன்றைய தினம் சுற்றத்தார், நண்பர்கள் உறவினர்களை அழைத்து விருந்துபசாரம் அளித்து தமது மகிழ்வைக் கொண்டாடுவர்.



## பாடச் சுருக்கம்

- மனையடி சாஸ்திரம் கூறும் விதிகளுக்கமைய வீடொன்றைக் கட்டி சுபநாளில், சுபமுகூர்த்தத்தில் குடிபுகும் மங்கள நிகழ்வே புதுமனை புகுதல் ஆகும்.
- புதுமனை புகுதலை கிருஹப்பிரவேசம் என்றும் கூறுவர்.
- வீடொன்றைக் கட்டும் போது அத்திபாரம் இடல், நிலைவைத்தல், வளைவைத்தல் போன்றன முக்கியம் பெறுகின்றன.
- புதுமனை குடிபுகும் நிகழ்வின் ஊடாக கடவுள் வழிபாட்டுடன் சமய நம்பிக்கைகளும் மேம்படுகின்றன.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. புதுமனை புகுதல் என்றால் என்ன?

2. புதுமனை புகுதல் என்பதனை வேறு எவ்வாறு அழைப்பர்?

3. புதுமனை குடிபுகும் தினத்தன்று இடம்பெறும் நிகழ்வுகள் யாவை?

## செயற்பாடு

நீங்கள் வாழும் பிரதேசங்களில் புதுமனை குடிபுகுதல் எனும் நிகழ்வில் இடம் பெறும் நடைமுறைகளைக் கேட்டறிந்து வகுப்பறையில் கலந்துரையாட ஒன்றை நிகழ்த்துங்கள்.

# 6 விரதங்களும் பண்டிகைகளும்

## விரதங்கள்



மனித வாழ்வை நெறிப்படுத்த உதவும் சாதனங்களில் விரதமும் ஒன்றாகும். விரதம் பற்றி ஆறுமுகநாவலர், ''**மனம் பொறி வழிபோகாது நிற்றற்பொருட்டு உணவை விடுத்தேனும் சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை விதிப்படி மெய்யன்போடு வழிபடுதல்.**'' என்று குறிப்பிட்டுள்ளார். மனிதன் தனது உடலையும், உள்ளத்தையும் ஒருங்குபடுத்தும் திருநாட்களே விரதங்கள் ஆகும். விரதங்கள் மனித ஒழுக்கத்தை மேம்படுத்தவும், கடவுள் மீது பக்தி கொள்ளவும் உதவுகின்றன. விரத நாளன்று பஞ்ச மாபாதகங்களைத் தவிர்த்து இயன்றளவு தான, தர்மம் செய்தல் உத்தமமான செயலாகும்.

விரதங்களை வாரம், திதி, நட்சத்திரம் எனும் அடிப்படையில் நாம் கடைப் பிடிக்கின்றோம். வார விரதங்களாக சோமவார விரதம் (திங்கள்), செவ்வாய்க் கிழமை விரதம், வெள்ளிக்கிழமை விரதம், சனிக்கிழமை விரதம் முதலியன அனுட்டிக்கப்படுகின்றன. திதி விரதங்களாக சதுர்த்தி, சங்கடஹர சதுர்த்தி, சஷ்டி, ஏகாதசி விரதம் போன்றன அடங்கும்.

நட்சத்திர அடிப்படையில் அனுட்டிக்கப்படும் விரதங்களில் தைப்பூசம், திருக்கார்த்திகை விரதம், மாசிமகம், வைகாசி விசாகம், பங்குனி உத்தரம் போன்றன குறிப்பிடத்தக்கன. இவற்றை விட மகா சிவராத்திரி விரதம், நவராத்திரி விரதம், வரலட்சுமி விரதம், கேதார கௌரி விரதம் போன்றனவும் எம்மவரால் ஆண்டுதோறும் சிறப்பாக அனுட்டிக்கப்பட்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

## (அ) நாள் விரதங்கள்

### 1. வெள்ளிக்கிழமை விரதம்

'சுக்கிர வாரம்' என்று வெள்ளிக்கிழமையைக் குறிப்பிடுவர். வெள்ளிக்கிழமை விரதம் முருகன், அம்பாள், பிள்ளையார் முதலிய தெய்வங்களை நோக்கி அனுட்டிக்கப் படுகிறது. வெள்ளிக்கிழமை விரதநாளில் வீடுகளில் தூய்மையைப் பேணுவதோடு, சைவ உணவு முறைகளையும் கடைப்பிடிப்பர். இத்தினத்தில் ஆலயத்திற்குச் சென்று இறைவழிபாட்டில் ஈடுபடுதல் சாலச்சிறந்தது ஆகும். இவ்விரத நாளில் முழுநாளும் உபவாசம் இருத்தல் சிறந்தது. இதற்கு இயலாதோர் ஒரு வேளை உணவு உட்கொண்டு விரதத்தை இறைபக்தியுடன் அனுட்டிப்பது அவசியமாகும்.

வெள்ளிக்கிழமைகளில் ஆலயங்களில் மட்டுமன்றி வீடுகள், பாடசாலைகள் ஆகிய இடங்களிலும் விசேட பிரார்த்தனைகள், கூட்டு வழிபாடுகள், பஜனைகள் என்பன நடைபெறுவதைக் காண்கின்றோம். எல்லா வெள்ளிக்கிழமைகளுமே இந்த வகையில் சிறப்புப் பெற்றிருப்பினும் ஐப்பசி மாதத்தில் வருகின்ற வெள்ளிக்கிழமை விரதம் விசேடமானதாகும். வெள்ளிக் கிழமை விரதத்தை முறைப்படி நோற்பவர்கள் தாம் எண்ணியதை எண்ணியவாறு அடைவர்.

### 2. செவ்வாய்க்கிழமை விரதம்

வாரந்தோறும் அனுட்டிக்கப்படும் விரதங்களில் செவ்வாய்க்கிழமை விரதமும் ஒன்றாகும். செவ்வாய்க்கிழமையை "மங்களவாரம்" எனவும் அழைப்பர். செவ்வாய்க்கிழமை விரதம் முருகன், அம்பாள், வீரபத்திரர், வைரவர் முதலிய தெய்வங்களை நோக்கி அனுட்டிக்கப்படுகிறது. செவ்வாய் மங்களகாரகன் ஆதலால் பெண்கள் தமக்குத் திருமணம் கைகூடுவதற்காக ஆடிச்செவ்வாய் தோறும் விரதமிருப்பர். சிறப்பாக ஆடி மாத முதற் செவ்வாயிலிருந்து தொடர்ந்து ஏழு செவ்வாய்க்கிழமைகளில் அம்பிகையைப் பூசித்து விரதம் அனுட்டிப்பது சிறந்ததாகச் சொல்லப்படுகின்றது. நற்கருமங்கள் நிறைவேற வேண்டியும் இவ்விரதத்தை சைவர்கள் மேற்கொள்வர்.

செவ்வாய்க்கிழமை விரதத்தின் போது இறைபக்தியுடன் ஒரு பொழுது அன்னம் அல்லது பால், பழம் உண்டு அனுட்டிப்பது சிறந்ததாகக் கருதப்படுகின்றது.

## (ஆ) மாத விரதங்கள்

### 1. தைப்பூசம்

**''பூசம்''** என்பது பஞ்சாங்கம் குறிப்பிடும் இருபத்தேழு நட்சத்திரங்களுள் எட்டாவதாகும். தை மாதத்தில் இடம்பெறும் பூச நட்சத்திரமன்று தைப்பூச விரதம் அனுட்டிக்கப்படுகின்றது. தைப்பூச தினமானது பெரும்பாலும் பௌர்ணமியுடன் கூடிய நாளாக இருக்கும். உலக சிருஷ்டியின் ஆரம்ப நாள் எனவும் இந்நாள் சிறப்பிக்கப்படுகின்றது. இத்தினம் நடராஜர், முருகன், அம்பிகை முதலிய தெய்வங்களை நோக்கி வழிபடும் நன்னாளாகும். தைப்பூசமானது சிவசக்தி ஐக்கியத்தைக் காட்டும் திருநாளாகவும், முருகனுக்குரிய விசேட நாளாகவும் கொண்டாடப்படுகின்றது. இத்தினத்தில் பலர் பாற்குடம், காவடி முதலியன எடுத்து முருகனை வழிபடுவர். தைப்பூசத்திருநாளிலே ஸ்ரீ நடராஜப் பெருமான் ஆனந்த நடனம் ஆடுவதாகப் புராண வரலாறுகள் கூறுகின்றன. இந்நடன தாண்டவத்தை வியாக்கிரபாதர், பதஞ்சலி முனிவர், தில்லை மூவாயிரம் மற்றும் மெய்யடியார்கள் கண்டுகளித்தனர். மேலும் வாயு, வருணன், அக்கினி ஆகிய தேவர்களும் சிவனின் அதீத சக்தியை உணர்ந்த நாளாகவும் தைப்பூசத் திருநாள் கருதப்படுகின்றது.

தேவர்களின் குருவாகிய பிரகஸ்பதி பூச நட்சத்திரத்தின் தேவதையாகவும், அறிவின் தேவதையாகவும் இருப்பதால் தைப்பூசத் தினத்தன்று விரதம் அனுட்டிப்போருக்கு பிரகஸ்பதியின் அருளால் பூரண அறிவு கிடைக்கும் என்பது நம்பிக்கை.

தைப்பூச விரத நாளன்று அதிகாலையில் துயில் எழுந்து, நீராடி, ஆசாரத்துடன் ஆலய தரிசனம் செய்து, காலை உணவை விடுத்து நண்பகல் புது நெல்லரிசிச் சாதம் உட்கொண்டு, இரவு வேளையில் ஏதேனும் பலகாரம் உண்ணலாம்.

தைப்பூச தினத்தில் ஏடு தொடக்குதல், சமய தீட்சை பெறுதல், பெண் குழந்தைகளுக்குக் காதுகுத்துதல், மூக்குக்குத்துதல் போன்ற சுபமங்கள காரியங்கள் மேற்கொள்ளப்படுகின்றன.

## 2. மாசிமகம்

மாசி மாதத்திலே வரும் மக நட்சத்திரம் கூடிய நாளே மாசிமகம் எனப் போற்றப்படுகின்றது. அம்பிகை, தக்கன் மகள் தாட்சாயினியாகத் தாமரை மலரில் அவதரித்த திருநாளாகவும் மாசிமகம் சிறப்பிக்கப் படுகின்றது. வருணனைப் பீடித்த தோஷம் நீங்கிய நாளும் இதுவே. மாசிமகம் நடராஜப் பெருமானின் அபிஷேக தினங்களில் ஒன்றாகையால் நடேசர் தரிசனத்திற்குச் சிறந்த நாளாகும். வியாழபகவான் மக நட்சத்திரத்துடன் கூடிய கும்ப இராசிக்குச் செல்லும் புண்ணியகாலம் மகாமகம் எனச் சிறப்பிக்கப்படுகின்றது. இது பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும். தமிழ் நாட்டில் கும்பகோணம் எனும் தலத்தில் மகாமகம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இலங்கையில் உள்ள சக்தி ஆலயங்களில் ஒன்றான மாத்தளை முத்துமாரியம்மன் ஆலயத்தில் மாசிமகத்தன்று தேர்த்திருவிழா நடைபெற்று வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. விரதம் என்றால் என்ன?
2. நட்சத்திரங்கள் எத்தனை?
3. வியாழபகவான் மகநட்சத்திரத்துடன் கூடிய கும்பராசிக்குச் செல்லும் புண்ணியகாலம் எவ்வாறு சிறப்பிக்கப்படுகிறது?
4. தைப்பூச தினத்தில் மேற்கொள்ளப்படும் சுபமங்கள காரியங்கள் இரண்டு தருக.
5. வருணனைப் பிடித்த தோஷம் நீங்கிய நாள் எது?

## செயற்பாடு

1. விரதங்களை பட்டியற்படுத்தி வகுப்பறையில் காட்சிப் படுத்துக.

2. நீங்கள் அனுட்டித்த விரதம் பற்றி ஐந்து நிமிடங்கள் பேச்சு ஒன்றினை வகுப்பறையில் நிகழ்த்துக.

## பண்டிகைகள்



இறையுணர்வை வளர்த்துக்கொள்ளவும், அதன் மூலம் மனிதனின் சிந்தனை, செயல் என்பவற்றைத் தூய்மை செய்யவும் பண்டிகைகள் உதவுகின்றன. குடும்பத்தில் மகிழ்ச்சி, ஒற்றுமை உணர்வு, சமூகத்தோடு கூடி வாழும் பண்பு, விருந்தோம்பல் என்பவற்றை மேம்படுத்த பண்டிகைகள் வழிவகுக்கின்றன.

பண்டிகைகளைக் கொண்டாடுவதற்கு ஆயத்தம் செய்யும் பொழுது வீடு, சுற்றாடல் என்பவற்றைச் சுத்தப்படுத்துவதுடன், நீராடிப் புத்தாடை தரித்தல்

புறத்தூய்மையை ஏற்படுத்தும். மேலும் வீட்டை அலங்கரிப்பதும், முற்றத்தில் கோலம் போடுதலும் புத்துணர்ச்சியையும் குதூகலத்தையும் ஏற்படுத்துகின்றன.

பண்டிகை நாட்களில் இறைவனை வணங்கி நற்செயல்களில் ஈடுபடுவதும், பாவச்செயல்களைத் தவிர்த்துக் கொள்வதும் வாழ்வு செம்மையடைய உதவுகின்றன. மேலும் உறவினர், அயலவருடன் விருந்து பரிமாறிக் கொள்வதாலும், நல்வாழ்த்துக் களைத் தெரிவித்துக் கொள்வதாலும் சமூக உறவுகள் வலுப்பெறுகின்றன. நாம் கொண்டாடும் பண்டிகைகள் உயர்ந்த நோக்கங்களைக் கொண்டவை. அவற்றின் பயன்களையும், தத்துவங்களையும் புரிந்து, பண்டிகைகளை நாம் கொண்டாட வேண்டும். தைப்பொங்கல், சித்திரை புதுவருடப்பிறப்பு, தீபாவளி என்பன முக்கிய பண்டிகைகளாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. நாம் இங்கு தைப்பொங்கல் பண்டிகையைச் சிறப்பாகக் கற்போம்.

## தைப்பொங்கல்

நாம் கொண்டாடும் பண்டிகைகளுள் தைப்பொங்கலும் ஒன்றாகும். தைமாதம் முதல் ஆனி மாதம் வரை சூரியன் வடக்கு நோக்கிச் செல்கின்ற காலப்பகுதி உத்தராயணம் எனப்படும். உத்தராயணத்தின் தொடக்கநாளான தை முதல் நாள் தைப்பொங்கல் பண்டிகை கொண்டாடப்படுகிறது. தனு ராசியிலிருந்து மகர ராசியில் சூரியன் பிரவேசிக்கும் காலம் மகர சங்கிராந்தி என்பதனால் தைப்பொங்கல் தினத்தை '**மகர சங்கிராந்தி**' என்றும் அழைப்பர். உணவு உற்பத்திக்கும், உயிரினங்களின் வாழ் விற்கும் தேவையான வெப்பம், ஒளி என்பவற்றைச் சூரியன் வழங்கி வருகின்றான். எனவே நெல் அறுவடையானதும் வீட்டு முற்றத்தில் புத்தரிசியில் பொங்கல் செய்து, சூரியனுக்குப் படைத்து, நாம் நன்றிக்கடன் செலுத்தி வருகின்றோம். **தைப்பொங்கல் பண்டிகை, தைத்திருநாள், உழவர் திருநாள், அறுவடைத்திருநாள்** எனப்பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றது.

தைப்பொங்கல் அன்று எல்லோரும் அதிகாலையில் துயில் எழுந்து நீராடி, முற்றத்தில் கோலம் இட்டு, சிறுபந்தல் இட்டு, மாவிலைத் தோரணம் கட்டி, நிறைகுடம் வைத்து, தீபம் ஏற்றி, அடுப்பில் புதுப்பானை வைத்து அதன் கழுத்துப் பாகத்தில் இஞ்சியிலை, மஞ்சள் இலை கட்டி, பிள்ளையார் பூசை செய்து, புத்தரிசியில் பொங்கல் பொங்கி, சூரிய பகவானை வரவேற்று தமது

நன்றிக்கடனை நிறைவேற்றுவர். பொங்கலுடன் பால், பழம், கரும்பு, இளநீர், பயறு முதலிய பொருள்களையும் சூரிய பகவானுக்கும், இறைவனுக்கும், தேவர்களுக்கும் படைத்து வழிபட்டு பின்பு தாம் குடும்பத்தோடும், சுற்றத்தாரோடும் உண்டு மகிழ்வர். **'தை பிறந்தால் வழி பிறக்கும்'** என்ற பூரண நம்பிக்கையுடன் இப்பொங்கல் திருநாள் கொண்டாடப்பட்டு வருகின்றது.

தைப்பொங்கல் தினத்திற்கு முதல்நாளாகிய மார்கழி இறுதித்தினத்தன்று போகிப்பண்டிகை கொண்டாடப்படுகின்றது. **'போகி'** என்பது இந்திரனைக் குறிக்கின்றது. எனவே, மழையைத் தந்து விளைச்சலுக்கு உதவும் இந்திரனுக்கு நன்றிக்கடனாக இப்பண்டிகை கொண்டாடப்பட்டு வருகின்றது. முக்கியமாக இந்தியாவில் உள்ள தமிழ் மக்கள் போகிப் பண்டிகையைத் தவறாது கொண்டாடி வருகின்றனர். போகிப் பண்டிகையன்று வீட்டிலுள்ள தேவையற்ற பொருட்களை யெல்லாம் தீயிலிட்டு எரித்துக் கொண்டாடுவார்கள்.

தைப்பொங்கலுக்கு மறுநாள் பட்டிப்பொங்கல் இடம்பெறும். இதனை '**மாட்டுப்பொங்கல்**' என அழைப்பர். தமக்கும், உழவுத் தொழிலுக்கும் உறுதுணை யாக விளங்கும் பசுக்களுக்கும், எருதுகளுக்கும் நன்றிக்கடன் செலுத்துவதற்காகவே பட்டிப்பொங்கல் கொண்டாடப்படுகின்றது. பட்டிப்பொங்கல் அன்று மாடுகளைக் குளிப்பாட்டி, அவற்றிற்கு குங்குமத்திலகம் வைத்து, பூமாலை அணிவித்து, சலங்கை கட்டி அலங்கரிப்பதுடன், பொங்கல் பொங்கி அவற்றிற்குக் கொடுத்து வழிபட்டு தாமும் உண்பர்.

ஆகவே, தைப்பொங்கல் பண்டிகையானது கடவுள் வழிபாட்டினையும், நன்றி மறவாமை, பகிர்ந்துண்ணல், அன்பு, அறம், புனிதம் பேணுதல் முதலான பண்புகளையும் வளர்க்க உதவுகின்றது.

## பாடச் சுருக்கம்

- இறையுணர்வை வளர்க்கவும், மனிதனின் சிந்தனை, செயல் என்பவற்றைத் தூய்மை செய்யவும் பண்டிகைகள் உதவுகின்றன.
- உத்தராயணத்தின் தொடக்க நாளான முதல்நாள் தைப்பொங்கல் கொண்டாடப்படுகின்றது.
- தைப்பொங்கல் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றது.
- தைப்பொங்கல் தினத்திற்கு முதல்நாள் போகிப்பண்டிகையும், அடுத்தநாள் பட்டிப்பொங்கலும் கொண்டாடப்படுகின்றது.
- தைப்பொங்கல் பண்டிகையானது பல பண்புகளையும் வளர்க்க உதவுகின்றது.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. தைப்பொங்கல் எப்போது கொண்டாடப்படுகின்றது?
2. தைப்பொங்கல் வேறு எப்பெயர்களால் அழைக்கப்படுகிறது?
3. தைப்பொங்கலையொட்டி நடைபெறும் பண்டிகைகள் யாவை?
4. பண்டிகைகளைக் கொண்டாடுவதனால் ஏற்படும் நன்மைகள் இரண்டு தருக.
5. சூரியன் தனு ராசியிலிருந்து மகர ராசியில் பிரவேசிக்கும் காலம் எவ்வாறு அழைக்கப்படும்?

## செயற்பாடு

தைப்பொங்கல், புதுவருடப்பிறப்பு ஆகிய தினங்களில் நடைபெறும் செயல்களை அறிக்கையாகத் தயாரிக்கவும்.

# 7 திருமுறை வைப்பு




சைவசமயத்தவரின் பெருஞ்சொத்து திருமுறைகளாகும். திரு + முறை எனப்பிரித்து "**திரு**" என்பது அழகு, தெய்வீகம், மங்கலம், மேன்மை, செல்வம் எனவும், "**முறை**" என்பது ஒழுங்கு, வரிசை, ஒழுக்கம், உறவு, தரம், நூல் எனவும் பொருள் தரும். அதாவது தெய்வீக உணர்வு பெருக, சமய ஒழுக்கத்தைப் பேணும் நோக்கத்துடன் தொகுக்கப்பட்ட உயர்வான நூல்களின் தொகுதியே திருமுறை களாகும். திருமுறைகளைத் தமிழ்வேதம், தமிழ்மறை எனவும் போற்றுவர்.

திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகங்கள் தொடக்கம் சேக்கிழாரின் பெரியபுராணம் வரை உள்ள பாடல்களின் தொகுப்பே திருமுறைகளாகும். சைவத்திருமுறைகளைத் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பியாவார். தொகுப்பித்தவர் முதலாம் இராஜராஜ சோழன் ஆவார். சிவபாதசேகரன், திருமுறைகண்ட சோழன் என்றும் இவருக்குப் பெயர்கள் உண்டு.

திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் பாடிய திருப்பதிகங்கள் நாலாம் ஐந்தாம், ஆறாம் திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருப்பதிகங்கள் ஏழாம் திருமுறையாகவும் வைப்புச் செய்யப்பட்டுள்ளது. இந்த ஏழு திருமுறைகளும் **அடங்கன் முறை** எனவும், இவற்றை அருளிய மூவரையும் **தேவார முதலிகள்** எனவும் அழைத்தல் சைவமரபாகும். இவற்றுக்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த மதங்கசூளாமணி எனும் பெண்மணி பண் அமைத்து உதவியுள்ளார்.

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகமும், திருக் கோவையாரும் எட்டாம் திருமுறையினுள் வைப்புச் செய்யப்பட்டுள்ளன. திருமாளிகைத் தேவர் தொடக்கம் சேதிராயர் வரையுள்ள ஒன்பது அடியார்கள் அருளிய திருவிசைப்பா பதிகங்களும், சேந்தனாரின் திருப்பல்லாண்டு எனும் பிரபந்தமும் ஒன்பதாம் திருமுறையாக வைப்புச் செய்யப்பட்டுள்ளது. பத்தாம் திருமுறை திருமந்திரமாகும். இது திருமூலரால் அருளப்பட்டது. பன்னெடுங்காலமாக யோக நிலையில் இருந்து உணர்ந்த உண்மைகளை மூவாயிரம் பாடல்களாக அருளியுள்ளார். இந்நூல் தமிழ் மூவாயிரம், திருமந்திரமாலை, தமிழாகமம், சுந்தரனாகமம் எனப் போற்றப்படுகிறது. தத்துவ விளக்கம், யோகாநுட்பம், தோத்திரம் எனப்பல பொருள்களைக் கூறும் இந்நூல் ஒன்பது தந்திரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

பதினொராம் திருமுறை பன்னிருவர் பாடிய 40 பிரபந்தங்களின் தொகுப்பாகும். திருவாலவாயுடையார் (இறைவன்) திருமுகப் பாசுரம் தொடக்கம் நம்பியாண்டார் நம்பி அருளிய பாடல்களும் இத்திருமுறையினுள் அடங்கும். ஒரேயொரு பெண்ணடியவரான காரைக்காலம்மையார் அருளிய பாடல்களும், சேர மன்னனான சேரமான் பெருமாள் (மாக்கோதை) அருளிய பாடல்களும் இதனுள் அடங்கும். சங்க இலக்கியப் பாடலுள் அடங்கும் திருமுருகாற்றுப்படை எனும் பிரபந்தமும் இதனுள் வைப்புச் செய்யப்பட்டுள்ளது.

பன்னிரெண்டாம் திருமுறையாக இரண்டாம் குலோத்துங்கனின் (அநபாயச் சோழன்) அமைச்சரான சேக்கிழார் அருளிய பெரியபுராணம் வைப்புச் செய்யப் பட்டுள்ளது. இதனைத் திருத்தொண்டர் புராணம் எனவும் அழைப்பர். இது சிவனடி யார்களின் பெருமை, பக்திச் சிறப்பு பற்றிய சைவப் பெருங்காப்பியமாகப் படைக்கப் பட்டுள்ளது.

## திருமுறைப் பாடல்கள் பல்வேறு சிறப்புக்களைக் கொண்டவை.

- திருமுறைகள் தெய்வீகசக்தி வாய்ந்தவை.
- ஓதுவார் உள்ளங்களைத் தூய்மையாக்க வல்லவை.
- நோய் தீர்ப்பவை.
- நல்வினைகளைப் பெருக்குபவை.
- ஆலயங்களிலும் இல்லங்களிலும் தினமும் ஓதப்படுபவை.
- இறைவன் மீது பக்தியை ஏற்படுத்துபவை.
- அவா, வெகுளி என்பவற்றைப் போக்கி, தூய உள்ளத்தைத் தருபவை.
- '**அன்பே சிவம்**' எனும் தத்துவ சிவநெறியில் ஒழுகவைப்பவை.
- வாழ்க்கையின் வழி காட்டியாக உதவுபவை.
- நினைத்தவர்களுக்கு நிலையான பயனைத் தருபவை.
- பிறர் துன்பத்தைக் கண்டு அவர்களுக்காக இறைவனை மன்றாடும் மாண்பினை உடையவை.
- ஞானத்தை வழங்கி முக்திக்கு இட்டுச்செல்பவை.

தேவாரத்திருமுறைகள் தில்லைச்சிற்றம்பலத்தில் கண்டெடுக்கப்பட்டதை நினைவுகூரும் வகையில், திருமுறைப் பாடல்களை ஓதும் போது, முதலிலும், ஓதிய பின்பும் '**திருச்சிற்றம்பலம்**' கூறி நிறைவு செய்வது சைவ மரபாகும்.

## பன்னிரு திருமுறைகளின் தொகுப்பு அட்டவணை

| எண் | திருமுறையின் பெயர் | திருமுறை ஆசிரியர் | | ஆசிரியர் தொகை |
|---|---|---|---|---|
| 1 அ<br>2 ட<br>3 ங் | தேவாரம்<br>தேவாரம்<br>தேவாரம் } | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் | தே<br>வா<br>ர | 1 |
| 4 க<br>5 ன்<br>6 மு | தேவாரம்<br>தேவாரம்<br>தேவாரம் } | திருநாவுக்கரசு நாயனார் | மு<br>த<br>லி | 1 |
| 7 றை | தேவாரம் - | சுந்தரமூர்த்தி நாயனார் | க<br>ள் | 1 |
| 8 | திருவாசகம்<br>திருக்கோவையார் } | மாணிக்கவாசக சுவாமிகள் | | 1 |
| 9 | திருவிசைப்பா<br><br>திருப்பல்லாண்டு | - திருமாளிகைத்தேவர்<br>- சேந்தனார்<br>- கருவூர்த்தேவர்<br>- நம்பிகாடநம்பி<br>- கண்டராதித்தர்<br>- வேணாட்டடிகள்<br>- திருவாலியமுதனார்<br>- புருடோத்தமநம்பி<br>- சேதிராயர்<br>- சேந்தனார் | | 9 |
| 10 | திருமந்திரம் | - திருமூலர் | | 1 |
| 11 | 40 பிரபந்தம்<br>பிரபந்தமாலை | - திருவாலவாயுடையார்<br>- காரைக்காலம்மையார்<br>- ஐயடிகள் காடவர்கோன்<br>- சேரமான் பெருமாள்<br>- நக்கீரதேவர்<br>- கல்லாடதேவர்<br>- கபிலதேவர்<br>- பரணதேவர்<br>- இளம்பெருமானடிகள்<br>- அதிராவடிகள்<br>- பட்டினத்து அடிகள்<br>- நம்பியாண்டார் நம்பி | | 12 |
| 12 | பெரிய புராணம் | சேக்கிழார் | | 1 |
| | 12 | | | 27 |

## பாடச் சுருக்கம்

- திருமுறைகள் தமிழ்வேதம், தமிழ்மறை எனவும் போற்றப்படும்.
- இறைவனைப் பாராயணம் பண்ணும் நோக்கில் தொகுக்கப்பட்ட உயர்வான நூல்களின் தொகுதியே திருமுறைகளாகும்.
- திருமுறைகள் திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகம் தொடக்கம் சேக்கிழாரின் பெரியபுராணம் வரையாகக் கொண்ட பாடல்களின் தொகுப்பாகும்.
- திருமுறைகளைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டவர் நம்பியாண்டார் நம்பியாவார். தொகுப்பித்தவர் - இராஜராஜ சோழன்.
- முதல் ஏழு திருமுறைகளும் அடங்கன் முறை எனவும், அதனை அருளியோர் தேவாரமுதலிகள் எனவும் அழைக்கப்படுவர்.
- திருமுறைகளுக்கு பாணர் மரபில் வந்த மதங்க சூளாமணி எனும் பெண்மணி பண் அமைத்துள்ளார்.
- திருமுறைகளை பண்ணுடனும், பக்தியுடனும் பாடுவதனூடாக இறையருள், இறையன்பு, பக்தி, ஆன்ம ஈடேற்றம் என்பவற்றைப் பெறலாம்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருமுறை என்பதன் பொருள் யாது?
2. பத்தாம் திருமுறை யாது? அதன் ஆசிரியர் யார்?
3. பெரியபுராணம் எத்தனையாம் திருமுறையாக உள்ளது? அதன் மறுபெயர்கள் எவை?
4. திருமுறைகளைப் பாடுவதனூடாக நாம் அடையும் பயன்கள் எவை?

## செயற்பாடு

பன்னிரு திருமுறைகளையும் அவற்றினது ஆசிரியர்களையும் அட்டவணைப் படுத்துக.

# 8 காரைக்கால் அம்மையார்



இந்தியாவின் சோழநாட்டிலே காரைக்கால் என்னும் பட்டிணத்தில் தனதத்தன் எனும் பெருவணிகன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஒரே புதல்வி. அவள் பெயர் புனிதவதி.

புனிதவதியார் சிறுமிகளுடன் விளையாடுகின்ற காலத்தும், கல்வி கற்கின்ற காலத்தும் சிவன் நாமங்களையே உச்சரித்துக் கொண்டிருப்பார். அவர் தமது பெயருக் கேற்றபடி தூயவாழ்வு வாழ்ந்தார். அவர் மணப்பருவத்தை அடைந்தபோது நாக பட்டிணத்தைச் சேர்ந்த பெருவணிகனான பரமதத்தன் என்பவனுக்கு பெற்றோர் திருமணம் செய்து வைத்தனர்.

ஒருநாள் பரமதத்தனிடம் உதவிதேடி வந்தவர்கள் இரண்டு மாங்கனிகளை அவனிடம் கையுறையாகக் கொடுத்தனர். அவன் அதைத்தன் வீட்டிற்கு அனுப்பி வைத்தான். அன்று சிவனடியார் ஒருவர் புனிதவதி வீட்டிற்கு மிகுந்த பசியுடன் வந்தார். புனிதவதி சிவனடியாரை அன்போடு வரவேற்றார். கால் கழுவ நீர் வழங்கினார். அவரை உள்ளே அழைத்து அமரச் செய்தார். அவருடைய பசியை உடன் போக்க விரும்பினார். அப்போது சாதம் மட்டும் ஆக்கப்பட்டிருந்தது. என்ன செய்வது என யோசித்தார். கணவன் அனுப்பி வைத்த மாங்கனிகளில் ஒன்றைப் படைத்து திருவமுது செய்வித்தார். சிவனடியாரும் அதனை உண்டு புனிதவதியாரின் அன்பு கலந்த உபசரிப்பினை வாழ்த்திச் சென்றார்.

சிவனடியார் சென்றபின் மதிய உணவிற்காக பரமதத்தன் வீட்டிற்கு வந்தார். கணவனுக்கு புனிதவதியார் உணவைப் பரிமாறினார். கணவன் கொடுத்தனுப்பிய எஞ்சிய மாங்கனியை உண்ணக் கொடுத்தார். அது இனிமையாக இருந்தமையால் மற்றைய கனியையும் தரும்படி கேட்டான். புனிதவதியார் செய்வதறியாது திகைத்தார். மற்றைய கனியை எடுத்து வருபவர் போல வீட்டினுள்ளே சென்றார். இறைவனுடைய திருவடியைத் தியானித்தார். இறைவன் அருள்புரிய வேண்டினார். என்னே அதிசயம்! அவர் கையிலே மாங்கனியொன்று வந்து சேர்ந்தது. இறைவன் திருவருளை வியந்து மகிழ்ச்சியடைந்தார். அம்மாங்கனியை விரைந்து சென்று கணவனிடம் கொடுத்தார். பரமதத்தனும் ஆசையுடன் அதனை வாங்கியுண்டான். உண்ட கனி முன்னையதிலும் பார்க்க மிகுந்த சுவையுடையதாக இருந்தது. அதனால் பரமதத்தன் ஆச்சரியமடைந்தான். ‘‘இது நான் முன்னர் உண்ட கனியை விட சுவையதிகமாக இருக்கிறதே. எங்ஙனம் இது கிடைத்தது?’’ என்று கேட்டான். புனிதவதியார் உண்மையை உள்ளவாறே கூறினார். அதனை நம்பாத பரமதத்தன் ‘அவ்வாறாயின், இறைவன் அருளால் இன்னுமொரு கனியைப் பெற்றுத்தர வேண்டும்’ என்றான்.

புனிதவதியார் மீண்டும் சென்று இறைவனை வேண்டி ஒரு கனியைப் பெற்று வந்து கணவன் கையில் கொடுத்தார். கணவர் கையில் வந்த உடனே கனி மறைந்தது. பரமதத்தனுக்குப் பயம் மிகுந்தது.

புனிதவதியாரைத் தெய்வீகப் பெண்ணாகக் கருதினான். அவரிடமிருந்து பிரிந்து சென்று வாழ விரும்பினான். வாணிபம் செய்து வருவதாகக் கூறிப் பிரிந்து சென்றான். பெரும் பொருளீட்டி பாண்டி நாட்டிலுள்ள ஒரு நகரத்தை அடைந்தான். அங்கேயே

ஒரு பெண்ணைத் திருமணம் செய்தான். அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு புனிதவதி எனும் பெயர் இட்டான்.

புனிதவதியார் பரமதத்தனைப் பிரிந்து வாழ்ந்த காலத்திலும் எம்பெருமான் மீது இறைசிந்தனையுடையவராகவே இருந்தார். பரமதத்தனின் செயலைக் கேள்வியுற்ற புனிதவதியாரின் சுற்றத்தவர்கள் மிகுந்த கவலை கொண்டு, புனிதவதியாரை சிவிகையில் ஏற்றி பாண்டி நாட்டுக்கு அழைத்துச் சென்றனர். புனிதவதி வந்திருக்கும் செய்தியை பரமதத்தனுக்கு அறிவித்தனர்.

பரமதத்தன் மிகுந்த பதட்டத்தோடு தனது இரண்டாவது மனைவியையும் குழந்தையையும் அழைத்துச் சென்று புனிதவதியாரின் பாதத்தில் வீழ்ந்து வணங்கினான். ஏனையோரையும் வீழ்ந்து வணங்குமாறு வேண்டினான். தனது குழந்தைக்கு புனிதவதி எனப் பெயரிட்டதன் காரணத்தையும் கூறினான்.

கணவனின் செயல் கண்ட புனிதவதியார் இவ்வுலக வாழ்வை வெறுத்தார். இறைவனிடம் தனது அழகிய மனித உருவத்தை மாற்றி தசையற்ற என்பு வடிவத்தை வேண்டினார். இறைவன் திருவருளினால் அக்கணமே என்புருப் பெற்றார். என்புருவோடு (பேய் உரு) கைலையங்கிரிக்குச் சென்று சிவனையும் உமையையும் தரிசிக்க விரும்பினார். அம்மை அப்பன் உறையும் அம்மண்ணிலே காலால் நடக்க அஞ்சித் தலையால் நடந்து சென்றார். அப்போது என்புருவத்தைக் கண்ட உமையம்மை 'இவர் யார்?' என இறைவனிடம் வினவ, அதற்கு இறைவன் 'உமையே! இவள் எம்மைத் துதிக்கின்ற அம்மை காண்' என்றார். என்புரு அருகில் வந்ததும் 'அம்மையே' என்று அழைத்தார். புனிதவதியார் 'அப்பா' என்றார். இறைவனாலே 'அம்மையே' என அழைக்கும் பேற்றைப் பெற்றார். சிவன் அவரிடம் 'விரும்புவதைக்கேள்' என்றார். அப்போது அம்மையார் இருகரங்களையும் கூப்பி, 'சுவாமி',

**இறவாத இன்ப அன்பு வேண்டும்.**
**இனிப்பிறவாமை வேண்டும். மீண்டும்**
**பிறக்கினும் தேவரீரை ஒருகாலமும் மறவாமை வேண்டும்.**
**தேவரீர் திருநடனஞ் செய்யும் போது தேவரீருடைய**
**திருவடியின் கீழே சிவானந்தத்தை அடையப்**
**பாடிக் கொண்டிருத்தல் வேண்டும்.**

என்று வேண்டுகின்றார். இதனைக் கேட்டு மகிழ்ந்து இறைவன் 'திருவாலங் காட்டிலே எனது திருநடனத்தைக் காண்' என்றருளினார். புனிதவதியார் திருவாலங் காட்டில் இறைவனது திருநடனத்தைத் தரிசித்து திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

இறைவன் திருவருளினாலேயே அற்புதத்திருவந்தாதி, திருவிரட்டை மணி மாலை, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் எனும் பிரபந்தங்களையும் பாடியருளினார். இவர் காரைக்கால் எனும் ஊரில் அவதரித்தமையாலும், சிவபெரு மானாலே 'அம்மையே' என்று அழைக்கப்பட்டதனாலும் 'காரைக்காலம்மையார்' என்னும் காரணப் பெயரைப் பெற்றார்.

அம்மையார் சங்கமருவிய காலப்பிற்பகுதியில் வாழ்ந்தவர். சமயகுரவர் நால்வருக்கும் காலத்தால் முற்பட்டவர். தமது வாழ்வின் பல்வேறு பருவங்களிலும் இறைவன் மீது இடையறாத பக்தி கொண்டவர். இறைவனிடம் வேண்டியவற்றை, உடனேயே கைவரப் பெற்றவர். இறைவனது திருவடி நீழலிலிருந்து பேரானந்தத்தை அனுபவிக்கும் பேற்றைப் பெற்றவர்.

## பாடச் சுருக்கம்

- புனிதவதியார் காரைக்கால் எனும் ஊரில் பிறந்தமையால் ***''காரைக்கால் அம்மையார்''*** எனப்பட்டார்.
- சிவனடியார்களுள் காலத்தால் முற்பட்டவரும், பெண்ணடியவர் எனும் பெருமைக்குரியவருமாவார்.
- சிறுவயதிலிருந்தே அம்மையார் சிவ பக்தியுடையவராகவும், சிவனடியார்களை வரவேற்று உபசரித்து உணவளிக்கும் உயரிய பண்புடையவராகவும் விளங்கினார்.
- பரமதத்தனான கணவரின் விருப்பத்திற்கேற்ப இறைவனிடம் இருந்து மாங்கனி பெற்ற பெருமைக்குரியவர்.
- இறையருளால், வேற்றுரு (பேய் வடிவம்) கைவரப்பெற்றவர்.
- சிவனால் ***'அம்மையே'*** என அழைக்கப்படும் பேறுபெற்றவர்.
- திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி என்னும் நூல்களை அருளியவர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. காரைக்கால் அம்மையாரின் இளமைப்பெயர் யாது?
2. காரைக்கால் அம்மையார் எனப் பெயர் வரக்காரணம் யாது?
3. காரைக்கால் அம்மையாரிடம் காணப்பட்ட சிறந்த நற்பண்புகள் மூன்றினை எழுதுக.
4. காரைக்கால் அம்மையார் பாடிய பிரபந்தங்கள் எவை?
5. காரைக்கால் அம்மையாரின் பக்திச் சிறப்புப் பற்றிக் குறிப்பிடுக.

## செயற்பாடு

காரைக்காலம்மையார் பாடிய பாடல்களுள் இரண்டினை மட்டும் எழுதி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# 9 திருமுறைகள்

திருமுறைகள் தெய்வத்தன்மை பொருந்திய அருட்பாக்கள் ஆகும். இப்பாக்கள் ஆலயங்களிலும், வீடுகளிலும், கல்விச்சாலைகளிலும் ஓதப்பட்டு வருகின்றன. அவற்றை நாமும் பண்ணுடனும், பக்தியுடனும் ஓதிப் பயன் பெறுவோம். திருமுறைகளை ஓதுகின்றபோது ஒழுங்கு முறையில் ஓதுதல் வேண்டும்.

**தேவாரம்**

**திருவாசகம்**

**திருவிசைப்பா**

**திருப்பல்லாண்டு**

**பெரியபுராணம்**

என்பன அவ்வொழுங்கு முறைகளாகும்.

இவ்வொழுங்கு முறையினையே நாம் **'பஞ்சபுராணம்'** என்போம். பஞ்சபுராணத்தை ஓதுகின்ற போது எமக்கு மனநிம்மதி, இறைபக்தி, ஆன்மீக உணர்வு என்பன ஏற்பட்டு எம் வாழ்வு மேன்மையடையும்.

இங்கு தரப்பட்டுள்ள திருமுறைப்பாக்களை மனனம் செய்து பக்தியோடு ஓதிப்பயன் பெறுவோம்.

## 1. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் - தேவாரம்

### (அ) இரண்டாந் திருமுறை

### பதிக வரலாறு

மதுரையை ஆண்ட சமண அரசனாகிய கூன்பாண்டியன் என்பவன் சம்பந்தர் மதுரையிற் செய்த அற்புதங்களைப் பார்த்த பின் சைவ சமயத்துக்கு மாறினான். அவன் நின்ற சீர்நெடுமாறன் என்னும் பெயரைப் பெற்றான். சம்பந்தருடன் இராமேஸ்வரத்தில் அரசனும், அவருடைய மனைவியரான மங்கையர்க்கரசியாரும், அவனுடைய மந்திரியான குலச்சிறையாரும் இருந்தனர். அவ்வாறு அங்கு இருந்த வேளையில், இலங்கையிலுள்ள திருக்கேதீச்சரம், திருக்கோணேஸ்வரம் எனும் சிவத் தலங்களை சம்பந்தர் மனதால் வணங்கித் தேவாரத் திருப்பதிகங்கள் பாடினார். **''விருது குன்றமா...''** எனும் தேவாரம் இரண்டாந் திருமுறையாய் அமைந்துள்ள திருக்கேதீச்சரத் திருப்பதிகத்தில் முதலாவது தேவாரமாகும்.

தலம் - திருக்கேதீச்சரம் பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

விருது குன்றமா மேருவில் நாணர
வாஅன லெரியம்பாப்
பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின்
றுறைபதி யெந்நாளும்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ்
பொழிலணி மாதோட்டம்
கருத நின்றகே தீச்சரங் கைதொழக்
கடுவினை யடையாவே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

திரிபுரத்து அசுரர்களுடைய வெற்றி கெடும்படி பெரிய மேரு மலையை வில்லாக வும், ஆதிசேடனை நாணாகவும் கடும் நெருப்பை அம்பின் முனையாகவும் கொண்டு, போர் புரிந்து (இடத்துக்கிடம் பறந்து செல்லக்கூடிய) முப்புரங் களையும் நீறாகும்படி அழித்தருளிய சிவபெருமான் இடமாகக் கொண்டு என்றும் உறைகின்ற தலமும் (போகம் வேண்டுவோர்) நாள்தோறும் நினைக்கின்ற ஊருமாகிய ஒலிக்கும் கடல் சூழ்ந்த நறுமணம் பொருந்திய சோலைகள் அழகைச் செய்கின்ற மாதோட்டத்தில், வீடுபேற்றை விரும்புவோர் எண்ணும்படி நிலைத்துள்ள திருக்கேதீச்சரத்தைக் கைகூப்பித் தொழுவாரை அடைதற்குரிய கொடிய வினைகள் வருத்தமாட்டா என்பது நிச்சயம்.

## (ஆ) மூன்றாந் திருமுறை

### பதிகவரலாறு

திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டின் திருத்தலங்கள் பலவற்றையும் தரிசித்ததன் பின் இராமேஸ்வரம் என்ற தலத்திற்கு வந்து அங்கு எழுந்தருளியுள்ள இறைவனை வணங்கிப் பதிகங்களைப் பாடினார். பின்னர் அங்கிருந்தவாறே இலங்கையில் அமைந்துள்ள சிவத்தலங்களுள் ஒன்றாகிய திருக்கோணேஸ்வரத்தில் எழுந்தருளி (வீற்றிருந்து) அருள் புரியும் கோணேஸ்வரப் பெருமானையும், அக்கோயிலின் இயற்கைக் காட்சிகளையும் ஞானக் கண்களாற் கண்டு கசிந்துருகிப் பாடினார். திருக்கோணேஸ்வரப் பதிகம் ஒன்றை நாமும் பாடுவோம்.

தலம் - திருக்கோணேஸ்வரம்

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

நிரைகழ லரவம் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

திருகோணமலைக் கடலில் ஓங்கி ஒலிக்கும் அலையானது சந்தனக் கட்டை களையும், பொன், மணி, முத்து முதலியவற்றையும் அள்ளி வீசுகின்றது. அக்கடற் கரையில் கோணேஸ்வரப் பெருமான் கோயில் கொண்டுள்ளார். அப்பெருமான் வீரக்கழலின் ஒலியோடு சிலம்பொலியும் கலந்து ஒலிக்கும் திருவடிகளை யுடைய குற்றமில்லாத குணத்தினர். திருநீறு அணிந்த திருமேனியையும், உமா தேவியாரைத் தமது இடப்பாகத்தில் கொண்ட தோற்றத்தையும் உடையவர். அழகிய இடபத்தின் உருவம் தீட்டப்பெற்ற வெற்றிக் கொடியையும் உடையவர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரால் பாடப்பெற்ற ஈழத்துச் சிவாலயங்கள் எவை? எங்கிருந்த வண்ணம் அத்தேவாரங்களைப் பாடியருளினார்?
2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் அற்புதங்களால் கவரப்பட்டு சைவத்திற்கு மாறிய மன்னன் யார்?
3. ''நிரைகழ லரவம்'' , ''விருது குன்றமா'' எனும் தேவாரங்களின் பண்புகளைக் குறிப்பிடுக.
4. ''நிரைகழ லரவம்...'' எனும் தேவாரத்தில் குறிப்பிடப்படும் சிவபெருமானின் சிறப்புக்கள் யாவை?
5. ''விருது குன்றமா...'' எனும் தேவாரத்தில் குறிப்பிடப்படும் புராணக் கதையைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

''நிரைகழ லரவம்'', ''விருது குன்றமா'' ஆகிய தேவாரங்களை மனனம் செய்து பாடுக.

## 2. திருநாவுக்கரசு நாயனார் - தேவாரம்

### (அ) நான்காந் திருமுறை

**பதிக வரலாறு**

திருநாவுக்கரசு நாயனார் திருக்கைலாயக் காட்சியைக் கண்டு தரிசிக்க விரும்பி நெடுந்தூரம் யாத்திரை செய்தார். அவர் உடம்பில் உள்ள சக்தி முழுவதும் நீங்கியது. அதனால் நடக்க இயலாது தேகத்தினால் உருண்டு சென்றார். உடம்பும் தேயப் பெற்றதனால் இளைத்து, செல்வதற்கு இயலாமல் இருந்தார். அப்பொழுது சிவபெருமான், ஒரு முனிவர் போல் அவர் முன் தோன்றி அவரைத் தடுத்தார். அதற்கு நாயனார் ''திருக்கைலாயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருக்கோலத்தைத் தரிசித்தாலன்றி, அழிந்து போகும் இவ்வுடம்பைக் கொண்டு திரும்பேன்'' என்றார். அவருடைய கலங்கா நிலையைக் கண்ட சிவபெருமான் நாயனாருடைய இளைப்பையாற்றித் திருவையாற்றிலே கைலாயக் காட்சியைக் கொடுத்தருளினார். அக் காட்சியைத் தரிசித்த திருநாவுக்கரசர், ''மாதர்ப்பிறைக் கண்ணியானை'' என்னுந் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

தலம் - திருவையாறு | பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை
 மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப்
 புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல்
 ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடும்
 களிறு வருவன கண்டேன்
கண்டே னவர் திருப் பாதம்
 கண்டறி யாதன கண்டேன்

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

அழகு பொருந்திய பிறைச் சந்திரனை மாலைபோற் சூடியவர் சிவபெருமான், இமயமலை அரசன் மகள் உமாதேவியார். இவர்களை பூக்களுடன் நீருங் கொண்டு சாத்தித் திருமுழுக்காட்டி, பாடல்களால் துதித்து ஏற்றி வணங்கச் செல்லுகின்றவர்களாகிய தொண்டர்களின் பின்செல்லுகின்ற யான், எனது அடிச்சுவடு பதியாமல் மெல்ல நடந்து திருவையாறு என்னுந் திருத்தலத்தை அடைகின்றபோது, அன்பும், இளமையும் பொருந்திய பெண்யானையோடு ஆண்யானையும் வருவதை நல்லடையாளமாகப் பார்த்தேன். சிவபெருமானுடைய அழகிய திருவடிகளையும் கண்டேன். நான் முன்னொரு போதும் பார்த்தறியாத அற்புதக் காட்சியையும் திருவையாற்றில் கண்டு கொண்டேன்.

## (ஆ) ஐந்தாம் திருமுறை

### பதிக வரலாறு

மேலைக்கடம்பூரில் உள்ள திருக்கோயில் தேர் வடிவமாகச் சக்கரங்களோடு அமைக் கப்பட்ட சிறப்புக்குரியது ஆகும். இத்தலத்தின் மீது திருநாவுக்கரசு நாயனார் ''நங்கடம்பனை.....'' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடியுள்ளார். இப்பாடல் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள அமிர்தகடேசுவரரின் பெருமைகளைக் கூறு கின்றது. அத்துடன் திருநாவுக்கரசு நாயனார் கடைப்பிடித்த தாசமார்க்கத்தின் சிறப்பு ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்னும் வரிகள் மூலம் வெளிப்படுத்தப் படுகின்றது.

தலம் - திருக்கடம்பூர்

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்அடி யேனையும் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

கடம்ப மாலையை அணிபவராகிய முருகக் கடவுள், உமாதேவியாரைப் பாகத்தில் உடையவர், திருக்கடம்பூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் ஆவார். அவர் கடமை அடியவனாகிய என்னையும் பாதுகாத்தருளலாகும். அப்பெருமானுக்கு நாள்தோறும் தொண்டு புரிந்து வழிபடுதல் என் கடமையாகும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருநாவுக்கரசு நாயனார் எத்தலத்திலிருந்து திருக்கைலாயக் காட்சியைக் கண்டு தரிசித்தார்?
2. **''போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவாரவர்பின் புகுவேன்''** எனும் தேவார அடிகளின் கருத்து யாது?
3. **''மாதர்ப் பிறைக்கண்ணி யானை'', ''நங்கடம்பனைப் பெற்றவள்''** எனும் தேவாரங்களின் பண் யாது?
4. திருநாவுக்கரசு நாயனார் கடைப்பிடித்த மார்க்கம் எது?
5. **''நங்கடம்பனைப் பெற்றவள்''** எனும் தேவாரத்தின் கருத்து யாது?

## செயற்பாடு

''மாதர்ப் பிறைக்கண்ணி யானை'', ''நங்கடம்பனைப் பெற்றவள்'' ஆகிய தேவாரங்களை மனனம் செய்து பாடுக.

# 3. சுந்தரமூர்த்தி நாயனார் - தேவாரம்

## (அ) ஏழாந் திருமுறை

### பதிக வரலாறு

பல தலங்களையுந் தரிசித்துத் தேவாரம் பாடியருளிய சுந்தரமூர்த்தி நாயனார், ஒருமுறை இராமேஸ்வரத்தை அடைந்து சுவாமி தரிசனஞ் செய்திருந்தார். அக்காலத்தில் இலங்கையில் உள்ள திருக்கேதீச்சரத்தின் சிறப்புக்களைத் திருவருளால் உணர்ந்து இத்திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

தலம் - திருக்கேதீஸ்வரம் பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

நத்தார்படை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்தமண வாளன்
பத்தாகிய தொண்டர் தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்திருக் கேதீச்சரத் தானே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

சங்கினைப் படையாக ஏந்திய ஞானியாகிய விஷ்ணுவை இடப வாகனமாகக் கொண்டு ஏறியவரும், கவிழ்ந்து தொங்குகின்ற வாயையும், மதமும் கொண்ட யானையின் தோலைப் போர்த்த நித்திய கல்யாணரும், இறந்தவர்களின் எலும்பை அணிந்தவரும் யாரெனில், அன்புள்ள அடியார்கள் வணங்குகின்ற பாலாவி என்னுந் தீர்த்தக்கரையிலே உள்ள திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானேயாவார்.

## (ஆ) ஏழாந் திருமுறை

### பதிக வரலாறு

சுந்தரமூர்த்தி நாயனார் பல தலங்களையும் தரிசிப்பாராகித் திருவாலம் பொழிலுக்கு வந்து சுவாமி தரிசனஞ் செய்தார். அன்று அவ்விடத்தில் தங்கி இரவில் நித்திரை செய்கையில் சிவபிரான் கனவில் எழுந்தருளி, ''மழபாடிக்கு வர மறந்தாயே'' என்றருளினார். நாயனார் நித்திரை விட்டு எழுந்து, திருமழ பாடியடைந்து இறைவனைத் தரிசித்தார். தரிசனம் செய்து ''பொன்னார் மேனியனே'' என்னும் திருப்பதிகம் பாடினார்.

தலம் - திருமழபாடி

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொன்னார் மேனியனே புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

*பொன்போன்ற திருமேனியை உடையவரே! புலித்தோலை அரையில் தரித்து, விளங்குகின்ற சிவந்த சடையில் கொன்றை மாலையை அணிந்தவரே! ஒப்புயர் வற்ற பரம்பொருளே! திருமழ பாடியெனுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள மாணிக்க இரத்தினம் போன்றவரே! தாய்க்கு ஒப்பானவரே! யான் நித்தமும் நும்மையேயன்றி வேறு யாரை நினைத்துத் துதிப்பேன்.*

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்ற இலங்கைச் சிவாலயம் எது?
2. ***''நத்தார்படை ஞானன்பசு''*** எனுந் தேவாரத்தில் குறிப்பிடப்படும் சிவபெருமானின் சிறப்புக்கள் யாவை?
3. திருக்கேதீச்சரத்தின் தீர்த்தம் யாது?
4. ***''பொன்னார் மேனியனே''*** எனும் தேவாரம் எத்தலத்தின் மீது பாடப்பெற்றது?
5. ***''பொன்னார் மேனியனே''*** எனுந் தேவாரத்தில் குறிப்பிடப்படும் சிவபெருமானின் சிறப்புக்கள் யாவை?

## செயற்பாடு

''நத்தார்படை ஞானன்பசு'', ''பொன்னார் மேனியனே'' ஆகிய தேவாரங்களை மனனம் செய்து பாடுக.

## 4. மாணிக்கவாசகர் சுவாமிகள் - திருவாசகம்

### (அ) எட்டாந் திருமுறை

#### பதிக வரலாறு

திருவாசகம் மாணிக்கவாசகரால் பாடப்பட்டதாகும். இது எட்டாந் திருமுறையில் அடங்குகின்றது. திருவாசகத்தில் திருச்சதகம், திருச்சாழல், திருவம்மானை, திருவெம்பாவை, பிடித்தபத்து முதலிய பல்வேறு வகைப்பாடல்கள் அடங்குகின்றன. பிடித்தபத்து என்னும் தொகுதியில் உள்ள பாடல் ஒன்று கீழே தரப்படுகின்றது. மாணிக்கவாசக சுவாமிகள் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சீர்காழிக்கு வந்து இறைவனை வணங்கிய பின், தில்லை நடராசரின் எடுத்த பொற்பாதம் நினைவுக்கு வர இப்பதிகத்தைப் பாடியருளினார்.

தலம் - திருத்தோணிபுரம் (சீர்காழி)

திருச்சிற்றம்பலம்

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

*தாயே! தந்தையே! உவமை இல்லாத மாணிக்கமே! அன்பாகிய கடலில் உண்டான அரிய அமுதமே! பொய்யை அதிகமாகச் சொல்லிப் பொழுதை வீணாகக் கழிக்கின்ற பயனற்ற இழிவானவனுக்கு மிகச்சிறந்ததாகிய சிவபதத்தைக் கொடுத்தருளிய செல்வமே! சிவ பெருமானே! இந்தப் பிறவியிலேயே உன்னை உறுதியாகப் பற்றினேன். இனி எழுந்தருளுவது எங்கே?*

## (ஆ) எட்டாந் திருமுறை

*மாணிக்கவாசகரின் அச்சோப்பதிகத்தில் இருந்து ஒரு பாடல் கீழே தரப்படுகின்றது. இறைவன் தமக்குச் செய்த கருணையை அச்சோ என்று வியந்து பாடிய பதிகமாதலால், இது அச்சோப்பதிகம் எனப்பட்டது.*

தலம் - தில்லை

திருச்சிற்றம்பலம்

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவம்ஆக்கி எனை ஆண்ட
அத்தன் எனக்கருளியவா றார்பெறுவார் அச்சோவே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

முத்தி மார்க்கத்தைத் தெரிந்து கொள்ளாத அறிவில்லாதவர்களோடு சேர்ந்து, அவர்களுடைய வழியில் முயற்சிக்கின்ற எனக்கு, பக்தி மார்க்கத்தை உபதேசித்து, எனது பழைய வினைகள் ஓடிப்போகும் வண்ணம் மனத்தின் கண் உள்ள மலங்களைப் போக்கி, சிவரூபமாக்கி என்னை ஆண்டு கொண்ட, என் தந்தை எனக்கு அருள் செய்த பேற்றை வேறு யார் பெற வல்லார். இது ஆச்சரியம்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருவாசகத்தைப் பாடியவர் யார்?
2. **''பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும் புழுத்தலைப் புலையனேன்''** எனும் பாடலடியில் குறிப்பிடப்படுபவர் யார்?
3. **''அம்மையே அப்பா ஒப்பிலா மணியே''** எனும் பாடலில் குறிப்பிடப்படும் சிவபெருமானின் சிறப்புக்கள் யாவை?
4. **''சித்தமலம் அறுவித்துச் சிவம் ஆக்கி எனை ஆண்ட அத்தன்''** எனக் குறிப்பிடப்படுபவர் யார்?
5. அச்சோப்பதிகம் என்பதற்கான காரணம் யாது?

## செயற்பாடு

**''அம்மையே அப்பா ஒப்பிலா மணியே'',** ''முத்திநெறி யறியாத மூர்க்கரொடு'' ஆகிய திருவாசகங்களை, மனனம் செய்து பாடுக.

# 5. திருவாலியமுதனார் - திருவிசைப்பா

## (அ) ஒன்பதாந் திருமுறை

திருவிசைப்பா என்பது இறைவனின் பெருமைகளைப் பாடுகின்ற தெய்வத் தன்மை பொருந்திய இசைப்பாடல் எனப் பொருள்படும். திருவிசைப்பாப் பாடல்களை ஒன்பதின்மர் பாடியுள்ளனர். அவற்றுள் திருவாலியமுதனார் பாடிய ஒரு பாடல் கீழே தரப்படுகின்றது.

தலம் - தில்லை　　　　　　　　　　　　　　　　பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

அன்ன நடையார் அமுதமொழியார்
அவர்கள் பயில்தில்லைத்
தென்னன் தமிழும் இசையும் கலந்த
சிற்றம் பலந்தன்னுட்
பொன்னும் மணியும் நிறைந்த தலத்துப்
புலித்தோல் பியற்கிட்டு
மின்னின் இடையாள் உமையாள் காண
விகிர்தன் ஆடுமே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

அன்னம் போன்ற மென்மையான நடையினையும், அமுதம் போன்ற இனிய சொற்களையும் உடைய மாதர்கள் வாழும் தில்லையில், அழகிய நல்ல தமிழும், இனிய இசையும் கலந்த சிற்றம்பலத்தில், பொன்னும் மணியும் நிறைந்துள்ள இடத்தில் புலித்தோலைப் பிடரியின்மேல் தரித்து, மின்னற் கொடி போன்ற மெல்லிய இடையை உடைய உமாதேவியார் காணுமாறு விகிர்தனாகிய இறைவன் திருநடம் புரிகின்றான்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருவிசைப்பா என்பதன் பொருள் யாது?
2. திருவிசைப்பா பாடல்களை எத்தனை பேர் பாடியருளியுள்ளனர்?
3. இறைவன் எங்கு திருநடனம் புரிவதாக இப்பாடல் குறிப்பிடு கின்றது?
4. ***“புலித்தோல் பியற்கிட்டு”*** எனக் குறிப்பிடப்படும் கடவுள் யார்?
5. ***“மின்னின் இடையாள்”*** எனச் சிறப்பிக்கப்படுபவர் யார்?

## செயற்பாடு

***“அன்ன நடையார்”*** எனும் திருவிசைப்பாவையும் பொழிப்பையும் மனனம் செய்க.

# 6. சேந்தனார் - திருப்பல்லாண்டு

## (அ) ஒன்பதாந் திருமுறை

### பதிக வரலாறு

ஒன்பதாம் திருமுறையிலுள்ள பாடல்களைப் பாடிய அடியவர்களில் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் இருவகைப் பாடல்களையும் பாடியவர் சேந்தனார் ஆவார். பல்லாண்டு என்பது பல வருடங்கள் வாழ்க என வாழ்த்தும் கவி ஆகும். உலகியல் நோக்கில் கூறப்படும் இவ்வுத்தியை ஆதியும் அந்தமும் இல்லாத இறைவன் திருவருளை வேண்டும் நோக்கத்துடன் பயன்படுத்திச் சேந்தனார், திருப்பல்லாண்டு படைத்துள்ளார்.

முன்பு தில்லையில் நிகழ்ந்த திருவாதிரைத் திருவிழாவின் போது, திருவீதியில் இழுக்கப்படும் தேர் ஓடாது தடைப்பட்டு நின்றபோது, அங்கு வந்திருந்த சேந்தனார்

திருப்பல்லாண்டைப் பாடியதும் தேர் தடை நீங்கி ஓடத்தொடங்கியது. இந்நிகழ்ச்சியின் பின்னர் ஆண்டு தோறும் திருவாதிரைத் திருவிழாக்காலத் தேரோட்டம் நிகழும்போது திருப்பல்லாண்டு ஓதும் வழக்கம் தில்லையில் மரபாயிற்று.

தலம் - கோயில் (சிதம்பரம்) பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

குழலொலி யாழொலி கூத்தொலி யேத்தொலி
யெங்குங் குழாம்பெருகி
விழவொலி விண்ணள வுஞ்சென்று விம்மி
மிகுதிரு வாரூரின்
மழவிடை யார்க்கு வழிவழி யாளாய்
மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடி யாரொடுங் கூடியெம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

குழல்களின் ஒலியும், யாழின் ஒலியும், நடனமாடும் கூத்தின் ஒலியும், எல்லா இடங்களிலும் அடியார் கூட்டமாகக் கூடி வாழ்த்தும் வாழ்த்தொலியும், திருவிழா ஒலியுமாகிய ஒலிகள் எல்லாஞ் சேர்ந்து பேரொலியாகிப் பெருகி, வான் வரை சென்று, மிக்கொலிக்கும் திருவாரூரில் எழுந்தருளியுள்ள இள ஏறூர்ந்த சிவபெருமானுக்கே, வழிவழியாக (பரம்பரை) தமக்குள்ளேயே திருமணஞ் செய்யும் குலத்தில் பிறந்த அடியார்களோடு சேர்ந்து எம் தந்தையாகிய சிவபெருமானுக்கே பல்லாண்டு கூறி வாழ்த்துப் பாடுவோமாக.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சேந்தனார் திருப்பால்லாண்டு பாடி தேரினை ஓடச் செய்த தலம் எது?
2. பல்லாண்டு என்பதன் பொருள் யாது?
3. ‘‘திருவாரூரின் மழவிடை யார்க்கு’’ எனக் குறிப்பிடப்படுபவர் யார்?
4. ‘‘குழலொலி யாழொலி’’ எனும் திருப்பல்லாண்டின் பண் யாது?

## செயற்பாடு

***‘‘குழலொலி யாழொலி’’*** எனும் திருப்பல்லாண்டுப் பாடலையும், அதன் பொழிப்பையும் மனனம் செய்க.

# 7. சேக்கிழார் - பெரியபுராணம்

## (அ) பன்னிரண்டாந் திருமுறை

இறைவனுக்கும் இறையடியார்களுக்கும் தொண்டு செய்து முத்தி அடைந்த அறுபத்து மூன்று அடியார்கள் வரலாற்றைக் கூறும் நூல் பெரியபுராணம் ஆகும். இறைவன் ‘‘உலகெலாம்…’’ என்று அடியெடுத்துக் கொடுக்க சேக்கிழார் பெருமானால் பாடப்பட்டதாகும். இந்நூலுக்கு சேக்கிழார் இட்ட பெயர் ‘திருத்தொண்டர் புராணம்’ என்பதாகும். இதிலிருந்து ஒரு பாடலை இங்கு பாடுவோம்.

திருச்சிற்றம்பலம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

(இவ்வுலகிலே) வைதிக ஒழுக்கம் தழைத்து வளரவும், மேலான சைவநெறி மேம்பட்டு வளரவும், பழைமையான சைவப் பரம்பரைகள் பொலியவும், தமது பரிசுத்தமான வாயைத் திறந்து அழுததனாலே ஞானப்பாலுண்டு தமிழ்வேதம் பாடிய, குளிர்ந்த செழிப்புள்ள வயல்களையுடைய சீர்காழியிலே அவதரித்தவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது பாதங்களாகிய மலர்களைப் பக்தியோடு எமது தலைமேல் வைத்து வணங்கி (அவரது திருவருளைத் துணையாகப் பெற்று) அவரது திருத்தொண்டின் சிறப்பைக் கூறுவோம்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பெரியபுராணத்தை அருளியவர் யார்?
2. எவருடைய வரலாற்றினைக் கொண்டதாகப் பெரியபுராணம் காணப்படுகின்றது?
3. பெரியபுராணம் பாட அடியெடுத்துக் கொடுத்தவர் யார்?
4. **“புனிதவாய் மலர்ந்தழுத”** எனும் பாடலடியில் குறிப்பிடப்படுபவர் யார்?
5. **“வேதநெறி தழைத்தோங்க”** எனும் பாடலில் யாருடைய சிறப்புக் கூறப்படுகின்றது? அவற்றுள் இரண்டினைத் தருக.

## செயற்பாடு

**''வேதநெறி தழைத்தோங்க'' எனும் பாடலை மனனம் செய்து பாடுக.**

## 8. திருப்புகழ் - தோத்திரப் பாடல்

சைவத்திருமுறைகள் தொகுக்கப்பட்ட காலத்தின் பின்னர் எழுந்த அருட் பாடல்கள் தோத்திரப்பாடல்கள் எனப்படும். தோத்திரப் பாடல்களில் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழும் ஒன்றாகும். ''இறவாமல் பிறவாமல்.......'' எனத் தொடங்கும் பாடல் இலங்கையில் உள்ள கதிர்காமம் என்ற முருகன் ஆலயத்தின் மீது பாடப் பட்டதாகும்.

திருச்சிற்றம்பலம்

இறவாமல் பிறவாமல் எனையாள்சற் குருவாகிப்
பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே குகனேசொற் குமரேசா
கறையானைக் கிளையோனே கதிர்காமப் பெருமானே

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

இறத்தல், பிறத்தல் இரண்டையும் தவிர்ப்பவனும், என்னை ஆளுகின்ற சற்குருவாகி நிற்பவனும் நிலையான வீட்டு பேற்றைத் தருபவனும் குறவர் குலப் பெண்ணாகிய வள்ளி நாயகியாரை திருமணம் செய்தீரே குகனே! சொல்லுக்குத் தலைவனே! யானை முகத்தை உடைய கணபதியின் தம்பியே கதிர்காமத்தில் உறையும் தலைவனே.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நாம் எவற்றைத் தோத்திரப்பாடல்கள் எனக் குறிப்பிடுகின்றோம்?
2. திருப்புகழில் ***“இறவாமல் பிறவாமல்”*** எனும் பாடல் எத்தலத்தின் மீது பாடப்பட்டது?
3. ***“குறமாதைப் புணர்வோனே”*** எனும் பாடலடியில் குறமாது எனக் குறிப்பிடப் படுபவர் யார்?
4. ***“இறவாமல் பிறவாமல்”*** எனும் பாடலில் குறிப்பிடப்படும் கடவுள் யார்? அவர் பற்றி பாடலில் குறிப்பிடப்படும் சிறப்புக்களைக் கூறுக.

## செயற்பாடு

***“இறவாமல் பிறவாமல்” எனும் பாடலையும், அதன் கருத்தையும் மனனம் செய்க.***

# 10 ஆலய வழிபாடு



ஆலய வழிபாடு இந்து மதத்தின் அம்சங்களில் தலையாயது. வாழ்க்கைக்கு உறுதுணையாக ஆலயங்கள் அமைந்துள்ளன. இறைவனை அடைவதற்குப் பல்வேறு மார்க்கங்கள் உண்டு. அவற்றில் ஒன்று ஆலய வழிபாடாகும். இறைவன் குடிகொண்டிருக்கும் இடமே ஆலயம் எனப்படும். ஆலயம் என்பது கோயில், தேவஸ்தானம் என்ற பெயர்களாலும் அழைக்கப்படும். ஆலயம் என்பதை 'ஆ + லயம்' எனப் பிரிக்கலாம். இதில் 'ஆ' என்பது ஆன்மாவையும், 'லயம்' என்பது லயப்படுதல் அல்லது ஒடுங்குதல் என்பதையும் குறிக்கும். எனவே, ஆலயம் என்பது

ஆன்மாக்கள் ஒடுங்குவதற்குரிய இடமாகக் கொள்ளப்படும். அதே போல 'கோயில்' என்பதை 'கோ+இல்' எனப்பிரிக்கலாம். இதில் 'கோ' என்பது இறைவனையும், 'இல்' என்பது உறையும் இடத்தையும் குறிக்கும். எனவே, கோயில் என்பது இறைவன் உறையும் இடம் எனப்பொருள்படும்.

ஆலயம் என்பது புனித இடமாகும். அங்கு செல்வோர் உடலையும், உள்ளத்தையும் தூயனவாய் வைத்துக்கொள்வது அவசியமாகும். ஆலயத்திற்குச் செல்வோர் நீராடி, தூய ஆடைகளை அணிந்து, சிவ சின்னங்களைத் தரித்து 'நமசி வாய' மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு செல்லுதல் வேண்டும். நாள்தோறும் ஆலயத்திற்குச் சென்று முறைப்படி வழிபாடு செய்தல் வேண்டும். நாள்தோறும் செல்ல முடியாதவர்கள் வாரத்தில் ஒரு நாளாவது செல்வது அவசியமாகும். இதனைவிட பிரதோசம், பௌர்ணமி, அமாவாசை, திருவாதிரை, கார்த்திகைத் தீபம், விநாயகர் சதுர்த்தி, கந்த சஷ்டி, சிவராத்திரி, நவராத்திரி, ஆடிப்பூரம் போன்ற விரத காலங்களிலும்; சித்திரை வருடப்பிறப்பு, ஆடிப்பிறப்பு, தீபாவளி, தைத்திருநாள் போன்ற பண்டிகைக் காலங்களிலும் குடும்பத்தோடு ஆலயத்துக்குச் சென்று இறைவனை முறைப்படி தரிசித்தல் வேண்டும்.

ஆலய வழிபாடு ஆன்மாக்களின் பக்குவநிலைக்கேற்ப வேறுபடுமா? என்ற வினா எழுவது இயல்பே. ஞானிகள் தமக்குள் கடவுளைக் காண்பர். 'காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக' என்ற தொடர் ஞானியர் உடலைக் கோயிலாகக் காணும் திறனை விளக்கும். சாதாரண மனிதர்களுக்கு இறைவனை மனக்கண்முன் காணும் திறன் இல்லை. இத்தகையோருக்கே ஆலய வழிபாடு இன்றியமையாததாய் அமைகின்றது. 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது ஔவைப் பிராட்டியின் கூற்று ஆகும்.

## ஆலய வழிபாட்டிற்குக் கொண்டு செல்லக்கூடிய பூசைப் பொருள்கள்

நாம் எமது உறவினர் வீட்டிற்குச் செல்லும்போது வெறுங்கையுடன் செல்வதில்லை என்பது எமக்குத் தெரியும். அதுபோல ஆலய வழிபாட்டிற்காக இறைவனிடம் செல்லும்போது பால், தயிர், பூக்கள், இளநீர் போன்ற அபிஷேகத் திற்குரிய பொருட்களை இயலுமானவரை எடுத்துச் செல்ல வேண்டும். பூசைப்

பொருட்களான வெற்றிலை, பாக்கு, கற்பூரம், ஊதுபத்தி, கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ ஆகிய பூக்களையும் மற்றும் பூசைக்கு ஏற்ற பொருள்களையும் பூசை த்தட்டில் வைத்து அவற்றை இடுப்புக்கு மேல் தாங்கிய வண்ணம் மெய்யன்போடு சி வநாமங்களை உச்சரித்துக்கொண்டு செல்லுதல் வேண்டும்.

## வழிபடும் முறை

ஆலயங்களில் கம்பீரமாக இராஜகோபுரம் கட்டப்பட்டிருக்கும். இதனை 'தூலலிங்கம்' என்றும் அழைப்பர். ஆலயத்தினை நோக்கிவரும் அடியவர்கள் கோபுரத்தைக் கண்டவுடன் இரு கரங்களையும் கூப்பி, திரியாங்க நமஸ்காரம் செய்தல் வேண்டும். ஆலயத்தினை அடைந்ததும் ஆலயக் கிணற்றில் கால் கழுவி, துவார பாலகரை வணங்கி கோயிலுக்குள் சென்று பலி பீடத்திற்கு இப்பால் ஆண்கள் தலை, மேல்வாய், தோளிரண்டு, கையிரண்டு, காலிரண்டு என எட்டு அவயவங்களும் நிலத்தில் பொருந்தும் வண்ணம் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என ஐந்து அவயவங்களும் நிலத்தில் பொருந்தும் வண்ணம் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும். பின்னர் திருநந்தி தேவரை வழிபட வேண்டும். தொடர்ந்து விநாயகரை வழிபட்டு மூலமூர்த்தியைத் தரிசிக்க வேண்டும். அதன்பின் உள்வீதியில் உள்ள பரிவார தெய்வங்களை வழிபடல் வேண்டும். இறுதியில் மும்முறை கைகொட்டி சண்டேஸ்வரரை வழிபட்டு சிவதரிசன பலனைத் தரும்படி வேண்டி, சிவசந்நிதியை அடைந்து இறை தியானத்தில் ஈடுபடுதல் வேண்டும்.

ஆலய வீதிகளில் வலம்வரும் போது சிவசிந்தனையுடன் இரு கைகளையும் கூப்பி, வணங்கிக்கொண்டு மூன்று முறையேனும், ஐந்து முறையேனும் அல்லது ஏழு முறையேனும் மெதுவாக வலம் வருதல் வேண்டும். அவ்வாறு வலம் வரும்போது விக்கிரகங்களைத் தொட்டு வணங்குதல் கூடாது.

## ஆலயத் தொண்டுகள்







இறைவன் எழுந்தருளி இருக்கின்ற ஆலயத்திலே கூட்டுதல், கழுவுதல், பூசை உபகரணங்களை விளக்குதல், பூந்தோட்டம் அமைத்தல், பூமாலை கட்டிக் கொடுத்தல், சுகந்த தூபமிடுதல், மணியடித்தல், திருவிழாக் காலங்களில் வாகனம் காவுதல், குடை, கொடி, ஆலவட்டம் என்பவற்றைப் பிடித்தல், சாமரை வீசுதல், தீவர்த்தி பிடித்தல், பிரார்த்தனை செய்தல் போன்ற சரியைத் தொண்டுகளையும் திருமுறைகளைப் பாடுதல், மந்திரங்களை உச்சரித்தல் போன்ற கிரியைத் தொண்டுகளையும் நாம் செய்தல் வேண்டும். அச்செயல்கள் பாவத்தைப் போக்கி புண்ணியத்தைத் தரும் செயல்களாகும்.

அடியவர்களுக்கு ஆலய வழிபாடும், ஆலயத்தொண்டும் மனநிறைவைத் தருகின்றன, அன்பை வளர்க்கின்றன, வாழ்வையும் மேம்படுத்துகின்றன, இறுதியில் ஆன்மா இறைவனை அடைய வழிவகுக்கின்றன. இவற்றை நாங்களும் வாழ்க்கையில் கடைப்பிடித்து உய்வோமாக.

**‘இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்’** என்பது நாவலர் வாக்கு.

## பாடச் சுருக்கம்

- ஆலயமானது இறைவன் சிறப்பாக வீற்றிருந்து, அருள்புரியும் இடமாகும்.
- ஆலய வழிபாட்டிற்குச் செல்வோர் ஒழுங்கு முறைகளைப் பின்பற்றல் வேண்டும்.
- ஆலயத்திற்குச் செல்லும் போது பூசைப்பொருட்களை எடுத்துச் செல்லுதல் உத்தமமாகும்.
- தொண்டுகள் செய்வதன் மூலம் நாம் எமது வாழ்வில் புண்ணியங்களைப் பெறுவோம்.
- ஆலயத்தில் செய்யத்தக்க தொண்டுகள் மூலம் எமது ஆன்மீக உணர்வை வளர்க்கவேண்டும்.
- ஆலய வழிபாட்டின் மூலம் ஆன்மா மோட்ச வழியைத் தேடிக் கொள்கின்றது.

## பயிற்சிகள்-1

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஆலயம், கோயில் என்பவற்றின் பொருள் யாது?
2. நீங்கள் ஆலயத்திற்குக் கொண்டு செல்லக்கூடிய பூசைப் பொருள்களைக் குறிப்பிடுக.
3. ஆலய வழிபாட்டின் பொழுது மேற்கொள்ளப்படும் நமஸ்காரங்கள் யாவை?
4. ஆலயத்தில் செய்யக்கூடிய சரியை, கிரியைத் தொண்டுகளைப் பட்டியற் படுத்துக.
5. ஆலய வழிபாட்டின் மூலம் பெற்றுக்கொள்ளப்படும் பயன்கள் யாவை?

## பயிற்சிகள்-2

**கீழே தரப்பட்டுள்ள சொற்களைக் கொண்டு வெற்றிடங்களை நிரப்புக.**

***சண்டேசுவரர், திரியாங்க, ஆன்ம ஈடேற்றம், கோபுரத்தை***

1. வெளிவீதி வலம் வரும்போது இருபாலாரும் ________________ நமஸ்காரம் செய்தல் வேண்டும்.
2. ஆலயத்தினை அண்மித்ததும் தூலலிங்கமாகிய ________________ முதலில் வணங்க வேண்டும்.
3. ________________ சந்நிதியை அடைந்து வணங்கி, துதித்து மும்முறை கைதட்டி சிவதரிசன பலனைத் தரும்படி வேண்டுதல் செய்ய வேண்டும்.
4. மனிதன் ________________ அடைய ஆலயவழிபாடு மிகவும் அவசியமாகிறது.

## செயற்பாடு

மாணவர்களை அருகிலுள்ள ஆலயத்திற்கு அழைத்துச் சென்று ஆலய வழிபாட்டிலும் சரியைத் தொண்டிலும் ஈடுபடுத்துக.

# 11 சமயக் குரவர்கள்



## அ) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

தமிழகத்தில் சீர்காழியில் வாழ்ந்த சிவபாதவிருதயர்க்கும் பகவதி அம்மையாருக்கும் ஆதிரை நாளன்று சம்பந்தர் அவதரித்தார்.

அவருக்கு மூன்று வயது ஆனது. ஒருநாள் அவர் தந்தையுடன் சீர்காழிக் கோயிலுக்கு நீராடச் சென்ற வேளை, குளத்தில் இறங்கிய தந்தையைக் காணாது, 'அம்மையே அப்பா' என அழுதார். அழுத பிள்ளைக்குசிவன், உமையம்மையின் காட்சியும் அருளும் கிடைத்து ஞானமும் கிட்டியது. அப்போது வானத்தில் உமையம்மையுடன் விடை மேல் வீற்றிருந்த இறைவனைப் பார்த்து, **'தோடுடைய செவியன்'** என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார். இந்நாளிலிருந்து தந்தையின் தோளில் அமர்ந்து ஆலயங்களுக்குச் செல்லத் தொடங்கினார்.

திருக்கோலக்காவில் கையினால் தாளமிட்டு **'மடையில் வாளை'** எனும் பதிகம் பாடி ஐந்தெழுத்துப் பொறிக்கப்பட்ட பொற்றாளத்தைப் பெற்றார். அதற்கு ஓசை கொடுத்த இறைவியை **'ஓசை கொடுத்த நாயகி'** எனச் சிறப்பிக்கின்றனர்.

திருப்பெண்ணாகடம் திருத்தூங்கானை மாடத்தைத் தொழுது, பின்னர் திருவருந்துறையை வணங்க நடந்து சென்ற சம்பந்தரின் பாதங்கள் வருத்தங் கொண்டன. இதைக் கண்ட இறைவன் அவ்வூர் அடியார்களின் கனவில் தோன்றி 'ஞானசம்பந்தன் நம்மிடம் வருகின்றான். அவனுக்குக் கொடுப்பதற்காக முத்துச் சிவிகை, குடை, முத்துச் சின்னங்களும் நாம் திருக்கோயிலில் வைத்திருக்கின்றோம். நீங்கள் அவற்றை அவன்பாற் கொண்டு செல்லுங்கள்' என அருளினார். அவற்றைப் பெற்றுக்கொண்ட சம்பந்தர் **'எந்தை ஈசன் எம்பெருமான்'** எனும் பதிகம் பாடினார்.

யாழினால் மீட்ட முடியாத அளவுக்கு பாணரின் வேண்டுகோளுக்கு ஏற்ப ' மாதர் மடப் பிடியும்' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடினார். அதனால் அப்பதிகம் 'யாழ்முரி' எனவும் அப்பண்ணினை 'யாழ்முரிப் பண்' எனவும் அழைக்கப்படுகிறது.



திருஞானசம்பந்த மூர்த்தி

- கொடிமாடச் செங்குன்றூரில் பனியினால் வருந்திய அடியார்களின் துன்பம் கண்டு, 'அவ்வினைக் கிவ்வினை' எனத் தொடங்கும் பதிகம் பாடி துன்பத்தைத் தீர்த்தார்.
- தந்தை யாகஞ் செய்வதற்காக 'இடரினுந் தளரினும்' என ஆரம்பிக்கும் பதிகம் பாடி ஆயிரம் பொன் கொண்ட ஒரு (உலவாக்கிழி ) பொன் முடிச்சைப் பெற்றுக் கொண்டார்.
- திருமருகலில் கன்னியுடன் வழிப்பயணம் சென்ற வணிகன், பாம்பு தீண்டி இறந்தான். அதற்கு அவ்வேளை 'சடையாயெனுமால்' எனத் தொடங்கும் பதிகம் பாடி உயிர்ப்பித்தார்.
- திருமறைக்காட்டில் தேவாரம் பாடித் திருநாவுக்கரசர் திறந்த திருக் கதவினை சம்பந்தர், 'சதுரம் மறை' எனும் தேவாரத்தைப் பாடி மூடச் செய்தார்.
- பாண்டிய மன்னனான கூன்பாண்டியனின் வெப்பு நோயினை, 'மந்திர மாவது நீறு' எனத் தொடங்கும் பதிகம் பாடித் தணித்தார்.
- சமணர்களுடன் அனல் வாதம் செய்து தீயிலிட்ட ஏட்டை, 'தளிர் இளவளரொளி' என ஆரம்பிக்கும் பதிகம்பாடி எரியாது காத்தார்.
- புனல் வாதத்துக்காக சம்பந்தர், 'வாழ்க அந்தணர்' எனும் தேவாரத்தை எழுதி அவ்வேட்டினை வைகை ஆற்றிலிட அது ஆற்றை எதிர் நோக்கிச் சென்றது. மேலும் 'வேந்தனும் ஓங்குக' என வாழ்த்திப் பாடியதன் காரணமாக அரசனது கூனும் நிமிர்ந்து 'நின்ற சீர்நெடு மாறன்' என்ற பெயரையும் பெற்றான்.
- இராமேஸ்வரத்திலிருந்து திருக்கேதீச்சரம், திருக்கோணேஸ்வரம் எனும் தலங் களைப் போற்றிப் பாடினார்.
- திருமயிலாப்பூரிற் சிவநேசர் என்ற அடியாரின் பாம்பு தீண்டி இறந்த பூம்பாவையை (மகள்) 'மட்டிட்ட புன்னை ' எனத் தொடங்கும் பதிகம் பாடி உயிர்ப்பித்தார்.
- திருநல்லூர்ப் பெருமணத்தில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பிகளின் மகளைத் திருமணம் செய்து, அவ் அக்கினியிலே, 'கல்லூர்ப் பெருமணம்' எனும் பதிகம்பாடி சுற்றத்தாருடன் வைகாசி மாத மூல நட்சத்திரத்தன்று இறையடி சேர்ந்தார்.

- பாலறாவாயர், ஆளுடைய பிள்ளை, கவுணியர் கோன், தென்புகலி வேந்தன், பரசமய கோளரி, காளி வேந்தர் போன்ற நாமங்களாலும் இவர் போற்றப்படுகின்றார்.

**''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்**
**ஞானசம்பந்தன் அடிபரவுவோம்''**

## பாடச் சுருக்கம்

- உமையம்மையிடம் ஞானப்பாலுண்டமையால் ஞானம் பெற்றார்.
- மூன்று வயதில் தேவாரம் பாடினார்.
- 1ஆம், 2ஆம், 3ஆம் திருமுறைகள் இவருடையதாகும்.
- சமயப்பணியுடன் சமூகப்பணியும் புரிந்து இறை பணியாற்றியவர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருஞானசம்பந்தர் உமையம்மையிடம் ஞானப் பாலுண்ட திருத்தலம் எது?
2. திருஞானசம்பந்தரின் தாய், தந்தையர் யாவர்?
3. பொற்றாளம் கிடைக்கப்பெற்ற திருத்தலம் எது?
4. சம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்கள் மூன்றினைக் குறிப்பிடுக.
5. சம்பந்தரால் பாடப்பெற்ற ஈழத்துச் சிவாலயங்கள் எவை?
6. திருஞானசம்பந்தர் குருபூசைத் தினம் எது?

## செயற்பாடு

திருஞானசம்பந்தரது சமயப் பணிகளையும், அச்சந்தர்ப்பத்தில் பாடப்பட்ட பதிகங்களையும் அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## ஆ) திருநாவுக்கரசு நாயனார்



திருநாவுக்கரசு நாயனார் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் பிறந்தார். இவரின் தந்தை பெயர் புகழனார். தாய் பெயர் மாதினியார். இவரது இயற்பெயர் மருள் நீக்கியார். இவரை அப்பர், தருமசேனர், உழவாரப்படையாளி, ஆளுடைய அரசு எனவும் அழைப்பர்.

இளம் வயதிலே கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய மருணீக்கியார் சமண சமயத்துக்கு மாறி ''தருமசேனர்'' என்ற பெயரைப் பெற்றார். இவரது தமக்கையான திலகவதியார் இறைவனிடம் தனது தம்பியை சமண சமயத்தில் இருந்து மீட்டுத் தருமாறு வேண்டினார். இறையருளால் திருநாவுக்கரசருக்கு சூலை நோய் ஏற்பட்டது. அப்போது நாவுக்கரசர் திருவதிகை வீரட்டானேசுவரரை வணங்கி, ''கூற்றாயின வாறு....'' எனத் தொடங்கும் பதிகம் பாடினார். உடனே அவரின் சூலை நோய் நீங்கியது.

- சமணர்கள் நீற்றறையில் அடைத்த போது, '' மாசில் வீணையும் மாலை மதியமும்...'' எனும் பதிகம் பாடி வெம்மையின் கொடுமையிலிருந்து நீங்கினார்.
- மதம் கொண்ட யானையை ஏவிவிட்டபோது, '' சுண்ண வெண் சந்தனச் சாந்தும்...'' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடியதும் யானை நாவுக்கரசரை வணங்கி நின்றது.
- கல்லோடு கட்டிக் கடலில் போட்டபோது, ''சொற்றுணை வேதியன்...'' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாட, கல் தெப்பமாக மிதந்தது.
- பாம்பு தீண்டிய அப்பூதி அடிகளின் மகனை, '' ஒன்று கொலா மவர் சிந்தை..'' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடி உயிர்ப்பித்தார்.
- திருப்பழையாறிலே வடதளி என்னும் ஆலயத்திலுள்ள சிவலிங்கத்தை சமணர்கள் மறைத்து வைத்த போது நாவுக்கரசர் அதனை வெளிக்கொணர்ந்தார்.
- திருமறைக்காட்டில் கதவினைத் திறக்க, ''பண்ணினேர் மொழியாள்...'' எனத் தொடங்கும் பதிகம் பாடினார்.
- திருவீழிமிழலையில் தேவாரம் பாடி படிக்காசு பெற்று பஞ்சம் தீர்த்தார்.

''எண்ணு கேன் என் சொல்லி எண்ணுகேனே..'' எனும் திருத்தாண்டகத்தைப் பாடி சித்திரை மாத சதய நட்சத்திரத்தில் தமது 81 வது வயதில் இறைவனுடன் இரண்டறக் கலந்தார்.

**''என் கடன் பணி செய்து கிடப்பதே''**

## பாடச் சுருக்கம்

- ஆலயவழிபாட்டிற்கு முக்கியத்துவமளித்த சமய குரவருள் முதன்மை பெற்றவர் திருநாவுக்கரசு நாயனார்.
- 'என் கடன் பணி செய்து கிடப்பதே' எனும் கூற்றிற்கு ஏற்ப சரியைத் தொண்டாற்றியவர்.
- 81 வயதுவரை வாழ்ந்து, அனுபவ பக்தி பெற்றவர்.
- 4ஆம், 5ஆம், 6ஆம் திருமுறைகள் இவருடையனவாகும்.
- திருஞானசம்பந்தருடன் இணைந்து சமய, சமூகப் பணியாற்றியவர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நாவுக்கரசரின் தாய், தந்தையர் யாவர்?
2. நாவுக்கரசர் சைவத்திலிருந்து எந்த மதத்திற்குச் சென்றார்?
3. நாவுக்கரசர் பாடிய முதல் தேவாரம் எது?
4. நாவுக்கரசருக்கு சமணர்கள் செய்த கொடுமைகள் எவை?
5. நாவுக்கரசர் செய்த அற்புதங்கள் நான்கினை எழுதுக.
6. நாவுக்கரசர் குருபூசைத் தினம் எது?

## செயற்பாடு

நீர் உமது ஆலயத்தில் செய்த சரியைத் தொண்டுகள் தொடர்பாக ஆசிரியருடன் கலந்துரையாடுக.

## இ) சுந்தரமூர்த்தி நாயனார்




இந்தியாவிலுள்ள திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூரிலே வாழ்ந்த ஆதிசைவ வேதியரான சடையனாருக்கும், இசைஞானியருக்கும் குழந்தையாகப் பிறந்தவர் சுந்தரர். இவரின் இளமைப் பெயர் நம்பியாரூரர். வீதியிலே விளையாடிக் கொண்டிருந்த நம்பியாரூரரின் அழகைக் கண்ட அந்நாட்டு அரசரான நரசிங்க முனையர், அவரைத் தாம் வளர்க்க விரும்பினார். அதற்குப் பெற்றோரும் விரும்பவே நம்பியாரூரர் அரண்மனையில் வளர்ந்து வந்தார். அரண்மனையில் வாழ்ந்தாலும் அவர் அந்தணருக்குரிய ஒழுக்கத்தையே பேணி வந்தார். திருமணப்பருவத்தை அவர் அடைந்த பொழுது புத்தூர் சடங்கவி சிவாச்சாரியார் மகளைத் திருமணஞ் செய்வதற்கான ஒழுங்குகள் நடைபெற்றன.

திருமண நாளன்று நம்பியாரூரர் திருமணப்பந்தலில் மணக் கோலத்தில் வீற்றிருந்தார். அப்போது சிவபெருமான், கிழப்பிராமண வடிவத்தில் அவ்விடத்திற்கு வந்து வழக்குரைத்து சுந்தரரைத் தடுத்து அடிமை கொண்டார். இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட சுந்தரர் சைவசமய வளர்ச்சிக்குப் பெரிதும் பங்காற்றினார்.

- ஒரு முறை திருவாரூர் கோயிலுக்கு வந்த சுந்தரர் அங்கு கூடியிருந்த சிவனடியார்களை மதிக்காது சென்ற போது அவ்வடியார்களுள் விறமிண்ட நாயனார் சுந்தரரது செயல் கண்டு சினம் கொள்ள, சுந்தரர் தம் தவறை உணர்ந்து சிவனடியார்களைப் போற்றும் முகமாக ''திருத்தொண்டத் தொகை''யைப் பாடினார்.

- திருவாரூரில் பங்குனி உத்தரத் திருவிழாச் செலவிற்காகப் பரவை யாருக்குக் கொடுப்பதற்கு, சுந்தரருக்குப் பொன் தேவையாக இருந்தமையால் திருப்பு கலூருக்குச் சென்று இறைவனை வணங்கி, தமக்குப் பொன் தருமாறு இரந்தார். அவருக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. மனச்சோர்வுடன் அண்மையிலிருந்த மடத்திற்குச் சென்று செங்கற்களாலேயே தலையணை அமைத்து நித்திரை செய்தார். விழித்தபோது செங்கற்களெல்லாம் பொன்கட்டிகளாக இருந்தன. அப்போது சுந்தரர் ''தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்......'' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடினார்.

- சுந்தரர் திருமுதுகுன்றம் செல்வதற்கு சிவபெருமான் அடியவராய் அவர் முன் தோன்றி வழிகாட்டினார். தமக்கு வழிகாட்டியவர் சிவபெருமானே என்றுணர்ந்து, ''வடிவுடை மழுவேந்தி...'' என்ற பதிகம் பாடி கூடலையாற்றூரை அடைந்து வழிபட்டு அதன் பின்னர் திருமுதுகுன்றஞ் சென்றார்.

சுந்தரமூர்த்தி நாயனார் அற்புதங்கள் செய்வதற்கு இறைவனே அடியவராக வந்து அருள் பாலித்திருக்கிறார். சுந்தரர் குருபூசைத் தினம் ஆடி மாதச் சுவாதி நட்சத்திர மாகும். இறைவனோடு தோழமை பூண்டு பக்தி கொண்ட சுந்தரர் யோக நெறியில் நின்றவராவார்.

***''தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்''***

## பாடச் சுருக்கம்

- சிவனடியார்களைப் போற்றி சுந்தரமூர்த்தி நாயனார், 'திருத் தொண்டத் தொகை' யைப் பாடினார்.
- சிவனடியார்களை வணக்கத்திற்குரியவராக்கியவர் இவராவார்.
- 7 ஆம் திருமுறையாக சுந்தரரது பதிகங்கள் தொகுக்கப்பட்டுள்ளன.
- இறைவனைத் தோழனாகக் கொண்டு யோக நெறியில் நின்றவர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சுந்தரரை வளர்த்த மன்னன் யார்?
2. யாருடைய மகளை சுந்தரருக்கு மணம் பேசினர்?
3. சுந்தரரின் திருமணத்தை சிவபெருமான் எவ்வடிவமேற்று தடுத்தருளினார்?
4. சிவனடியார்களைப் போற்றி சுந்தரர் பாடிய நூல் எது?
5. சுந்தரமூர்த்தி நாயனாரின் சமயப் பணிகள் மூன்றினைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

சுந்தரமூர்த்தி நாயனார் சிவனடியார் பெருமைகளைப் பாட முன்வந்த சந்தர்ப்பத்தை ஆசிரியருடன் கலந்துரையாடி கதை வடிவமாக்குக.

## ஈ) மாணிக்கவாசக சுவாமிகள்



சமய குரவர் நால்வரில் ஒருவரான மாணிக்கவாசக சுவாமிகள் ஏனைய மூவரிலும் வேறுபட்டவர். இவர் மந்திரிப்பதவி வகித்தவர். இதன் மூலம் 'தென்னவன் பிரமராயன்' என்ற பட்டத்தையும் பெற்றவர். எனினும் இவற்றையெல்லாம் துறந்து ஆன்மிக வாழ்வுக்குத் தன்னை அர்ப்பணித்த இவர், தில்லை நடராசப்பெருமானின் வேண்டுகோளுக்கு இணங்க திருவாசகப் பாக்களைப் பாடியருளினார்.

இவர், பாண்டிநாட்டிலே திருவாதவூரிலே அமாத்தியப் பிராமண குலத்திலே அவதரித்தார். இவருடைய தந்தையார் பெயர் சம்பு பாதாசிரியர். தாயார் பெயர் சிவஞானவதியார். திருவாதவூரிலே அவதரித் தமையால் திருவாதவூரர் என்ற சிறப்புப் பெயரையும் பெற்றார். இவர் அருளிய திருவாசகமும், திருக்கோவையாரும் பக்திச் சுவை நிறைந்தவை. திருவாசகம் 655 பாடல்களையும், திருக்கோவையார் 400 பாடல்களையும் கொண்டவை. இவருக்கு மணிவாசகர், ஆளுடைய அடிகள், மணிமொழியார், கோவைவேந்தர் போன்ற மறுபெயர்களும் உண்டு.

இவர் ஏறத்தாழ 32 ஆண்டுகள் மாத்திரமே வாழ்ந்து இறை பாதத்தினை அடைந்தவர். இவர் ஒழுகிய நெறி ஞானநெறியாகும். இவரது வரலாறு கூறும் நூல்களாக திருவிளையாடற் புராணம், திருவாதவூரடிகள் புராணம் திருவுத்தர

கோசமங்கைப் புராணம் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவர் சன்மார்க்க நெறியிலே நின்று சாயுச்சியமுத்தி அடைந்தார். இவரது பாடல்களிலே போற்றப்பட்ட சிவனடியார்களாக இராவணண், மண்டோதரி, கண்ணப்பர், சண்டேசுவரர் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்.

இவருக்கு நிலையில்லாத உலக இன்பங்களில் வெறுப்பும், நிலையான வீட்டின்பத்தைத் தரும் சிவத்தொண்டிலே விருப்பமும் வளர்ந்தது. அதனால் இவர் தமது சிவஞானத்தைப் போதிக்கும் குரு ஒருவரை அடைந்து உபதேசம் பெற விரும்பினார். இவ்வாறிருக்கும் போது ஒருநாள் அரசர் இவரிடம் திரவியங்களைக் கொடுத்து சோழநாட்டிலே போய் வடநாட்டு வர்த்தகர்களிடம் குதிரைகள் வாங்கி வரும்படி அனுப்பினார். இவரும் சோழநாட்டிலே திருப்பெருந்துறையை அடைந்த போது அங்கே குருந்தமரநிழலிலே குருவடிவாய் அமர்ந்திருந்த சிவனைத் தரிசித்து, குதிரை வாங்கக் கொண்டு சென்ற திரவியங்களை அவரிடமே கொடுத்தார்.

ஏவலர்கள் மூலம் இவரது நிலையை அறிந்த மன்னன் கடிதமொன்றை அனுப்பி மாணிக்கவாசகரை வரச்செய்தார். குறித்த நாளின் பின் குதிரைகள் வந்து சேருமென மாணிக்க வாசகர் கூறினார். குறித்த காலம் வந்தும் குதிரைகள் வந்து சேராமையால் மன்னர் மாணிக்கவாசகரை சிறைப்படுத்தினார். அடியாரைக் காக்க நினைத்த இறைவன் குதிரை வர்த்தகராக மாறி நரிகளைக் குதிரைகளாக்கி மன்னனிடம் ஒப்படைத்து மாணிக்கவாசகரைக் காப்பாற்றினார்.

நரிகள் குதிரைகளாக மாறிவந்த நாள் ஆவணிமூல நன்னாளாகும். அன்றிரவே குதிரைகளாக இருந்த நரிகள் ஊளையிட்டன. அரசன் இறைவனின் செயலை அறியாதவராதலால் மீண்டும் மணிவாசகர் சிறையில் அடைக்கப்பட்டார்.

சிவபெருமான், வைகையாற்றைப் பெருக்கெடுக்கச் செய்து, மதுரை நகரை அழியும்படி செய்தார். சிவனின் திருவருளாலே உண்மையை உணர்ந்து மாணிக்கவாச கரை அரசன் சிறையிலிருந்து விடுவித்தார். பின்னர் சிவபெருமான் ஆற்றை வற்றச் செய்து அணையையும் கட்டுவித்தார். தன் பங்கை அடைக்க ஆளில்லாமல் வருந்திய செம்மனச் செல்வி என்னும் மூதாட்டிக்கு, இறைவனே வேலையாளாகி கூலிக்குப் பிட்டு வாங்கி உண்டு, மண் சுமந்து முதுகிலே அடிபட்டு திருவிளையாடல் நிகழ்த்தினார். இதனால் மாணிக்கவாசகரின் புகழ் எங்கும் பரவியது.

மாணிக்கவாசகர் அரசனிடம் விடைபெற்றுத் திருப்பெருந்துறையை அடைந்து, குருவிடம் உபதேசம் பெற்றுச் சில நாளிருந்தபின் குருவாகிய சிவபிரான் இவருக்குச் சிலகடமைகளைச் செய்யுமாறு கட்டளையிட்டார். மணிவாசகரும் குருவின் கட்டளைப்படி சிலநாள் வரை திருப்பெருந்துறையில் இருந்து திருவாசகங்களைப் பாடிப் பின் அங்கிருந்து புறப்பட்டுத் திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம், திருவுத்தரகோசமங்கை முதலிய பல தலங்களுக்கும் யாத்திரை செய்து இறுதியில் சிதம்பரத்தை அடைந்தார்.

சிலநாள் அங்கே தங்கியிருந்து புத்தபிக்குவை வாதில் வென்றார். இவரது திருவாசகத்தை இறைவனே ஏடும் எழுத்தாணியும் கொண்டு எழுதினார். அத்திரு வாசக ஏட்டைப் பெற்றுக்கொண்ட தில்லைவாழ் அந்தணர்கள் அதற்குப் பொருள் கூறுமாறு இவரிடம் கேட்டனர். பொன்னம்பலத்திலே பொருள் கூறுவோம் என்று அவர்களை அழைத்துக் கொண்டு சென்று, கூத்தாடும் பெருமானைச் சுட்டிக்காட்டி, ''இவரே இப்பாடலின் பொருள்'' என்று கூறியவாறு உள்ளே சென்று, அப்பெருமானோடு கலந்து முத்தி அடைந்தார். இவரது முத்தி - ஆனிமக நன்னாளாகும்.

## நால்வர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த
புகலியர் கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன் மிதப்பில்
அணைந்த பிரான் அடிபோற்றி
வாழி திரு நாவலூர்
வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத
வூரர் திருத் தாள் போற்றி

(பன்னிரு திருமுறைத் திரட்டு)

## பாடச் சுருக்கம்

- மாணிக்கவாசகரது சமயப் பணிகளுள் சிறப்பானது எட்டாம் திருமுறையாகிய திருவாசகத்தை எமக்கு அருளியமையாகும்.
- திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் சிவபெருமானால் ஆட்கொள்ளப் பட்டார்.
- இவரது திருவாசகம் இறைவனால் எழுதப்பட்டது.
- சமய குரவர்கள் வரிசையில் ஞான நெறி நின்று முத்தி அடைந்தவர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருவாசகம் யாரால் அருளப்பட்டது?
2. திருவாசகம் எத்தனை பாடல்களைக் கொண்டது?
3. மாணிக்கவாசகர் நின்ற நெறியாது?
4. மாணிக்கவாசகர் வரலாற்றினைக் கூறும் நூல்கள் எவை?
5. மாணிக்கவாசகர் நிகழ்த்திய சமய அற்புதங்களைக் குறிப்பிடுக.
6. மணிவாசகர் குருபூசைத் தினம் எது?

## செயற்பாடு

திருவாசகத்தின் சிறப்புப் பற்றி பேச்சொன்றை நிகழ்த்துக.

# 12 சேர். பொன். இராமநாதன்



பொன்னம்பலம் இராமநாதன் 1851 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 16 ஆம் திகதி கொழும்பில்பிறந்தார். இவரது தந்தையார் யாழ்ப் பாணம் மானிப்பாயைச் சேர்ந்த பொன்னம்பலம் முதலியார். தாயார் செல்லாச்சி அம்மையார். குமாரசாமி முதலியார், சேர். அருணாசலம் ஆகியோரது சகோதரராவர். ஆரம்பக் கல்வியை கொழும்பு இராசதானிக் (றோயல்) கல்லூரி யிலும், உயர் கல்வியை சென்னை இராசதானிக் கல்லூரியிலும் பயின்றார். பின் சட்டக் கல்வி யைப் பெற்றுச் சட்டத்தரணியானார். தற்காலிக சட்டமா அதிபராகக் கடமையாற்றினார். பிரித் தானிய அரசாங்கத்தால் வழங்கப்படும் 'நைட்' பட்டத்தையும் பெற்றார்.

## அரசியல் சேவை

1879 ஆம் ஆண்டு இலங்கையின் சட்டசபை உறுப்பினராக நியமிக்கப்பட்டார். 1911 ஆம் ஆண்டில் நடைபெற்ற இலங்கையின் சட்ட சபைக்கான முதலாவது தேர்தலில் முழு இலங்கையரையும் பிரதிநிதித்துவப்படுத்தும் ஒரே உறுப்பினராக இராமநாதன் தெரிவுசெய்யப்பட்டார். விக்டோரியா மகாராணியின் 50 ஆவது ஆண்டு விழாவிற்கு இலங்கைப் பிரதிநிதியாகச் செல்ல இராமநாதனே தெரிவு செய்யப் பட்டார். 1921 ஆம் ஆண்டு பிரித்தானிய ரசினால் பிரபுப் பட்டம் (Sir) வழங்கிக் கௌரவிக்கப்பட்டார். மிகுந்த சொல்வன்மையும், வாதத்திறமையும் வாய்க்கப் பெற்றவர். இலங்கையின் அரசியல் வரலாற்றில் தேசபிதாவாகப் போற்றப்படுகிறார்.

## சமூகசேவை

அரசியல் தொண்டுகள் தவிர, சமய, சமூகத்துறைகளிலும் விருப்புடன் சேவை செய்துள்ளார். இந்துக்களின் கல்வி மேம்பாட்டிற்காக யாழ்ப்பாணத்தில் பெண்களுக்கும், ஆண்களுக்கும் பாடசாலைகளை நிறுவியுள்ளார். பெண்கள் பாடசா லையாக உடுவில் மருதனார் மடத்தில் அமைந்துள்ள இராமநாதன் பெண்கள் கல்லூரியையும், ஆண்களுக்காக பரமேஸ்வராக் கல்லூரியையும் நிறுவினார். இதன் ஒரு பகுதியில் 1974 ல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டது.

## சமயசேவை

'கற்றலின் பயன் கடவுளை வணங்குதல்' எனும் அடிப்படையில் பரமேஸ்வராக் கல்லூரியில் பரமேஸ்வரன் கோயிலைக் கட்டுவித்தார். உள்ளத்தில் ஆன்மீக உணர்வு குடிகொண்டிருந்தவராய் இருந்தார். சமயம், தத்துவம், யோகநெறி என்பவற்றைத் தெளிவாகக் கற்றுணர்ந்தார். கீழைத்தேய மெய்யியல் தூதுவராக விளங்கினார். அமெரிக்கா, ஐரோப்பா, அவுஸ்திரேலியா முதலான நாடுகளுக்குச் சென்று தமது ஆன்மீகப் போதனையால் சைவசமயத்தைப் பரவச் செய்தார். சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் முதல் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார்.

கொழும்பு கொச்சிக்கடையில் சைவத்தின் பெருமையினை உணர்த்தும் கலைக்கூடமாக பொன்னம்பலவாணேச்சரத்தை கற்றளியாகக் கட்டிய பெருமை சேர். பொன். இராமநாதனையே சேரும். பண்டைய சைவமரபின் கலை அழகோடு மிளிரும் இவ்வாலயம் இராமநாதனின் சைவப்பணிக்குச் சான்றாய் விளங்குகிறது. 1923 ஆம் ஆண்டிலே யாழ்ப்பாணத்தில் சைவ வித்தியா விருத்திச் சங்கம் தோன்றுவதற்கும் காரணமாக இருந்தார். அதன் முதற் தலைவரும் இவராவார். பின் அதன் போஷக ராகவும் விளங்கினார்.

சேர். பொன். இராமநாதன் அவர்கள் அறம், பணிவு, ஆன்மீக ஞானம் முதலான குணங்களோடு இந்துதர்மம் போதிக்கும் சமயப் பொதுமை உடையவராகவும் விளங்கினார். பிறசமயங்களை மதித்தார். சேர். பொன். இராமநாதன் அவர்கள் கல்வி, சட்டத்துறை சார்ந்த நூல்களையும் எழுதியுள்ளார். திருக்குறட்பாயிரம், இராமநாத பாஷ்யம், ஔவைநாயகியின் ஆத்திசூடி, திருமந்திர உரை விளக்கம், பகவத்கீதா தமிழ் மொழிபெயர்ப்பும் விருத்தியுரையும் என்பன குறிப்பிடத்தக்கன.

சேர். பொன். இராமநாதன் அவர்கள் 1930 ஆம் ஆண்டு நவம்பர் 26 ஆம் திகதி சிவபதமடைந்தார். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், பொன்னம்பலவாணேஸ்வரர் ஆலயம், இராமநாதன் மகளிர் கல்லூரி, சைவ வித்தியா விருத்திச் சங்கம் ஆகியன இன்றும் அவரது பெயரை நினைவு கூர்கின்றன.

## பாடச் சுருக்கம்

- சேர். பொன். இராமநாதன் சிறந்தவொரு கல்விமானாவார்.
- இவர் அரசியல், சமூகம், சமயம் என எல்லாத் துறைகளுக்கும் பணியாற்றி உள்ளார்.
- ஈழத்து சைவசமயத் துறையில் இவரது பணிகள் முக்கிய இடம் வகிக்கின்றன.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சேர்.பொன். இராமநாதன் எப்போது பிறந்தார்?
2. இராமநாதன் எப்போது சேர் பட்டம் பெற்றார்?
3. இராமநாதனின் சமயப்பணிகளை அட்டவணைப்படுத்துக.
4. சேர். பொன். இராமநாதன் எப்போது இறைபதம் அடைந்தார்?

## செயற்பாடு

சேர். பொன். இராமநாதனது சமய, சமூகப் பணிகளை அட்டவணைப்படுத்துக.

# 13 கடவுள்



உலகத்துப் பொருட்கள் எல்லாம் முக்கிய மூன்று பிரிவினுள் அடங்கும். அவை, அறிவிக்காமலே அறியும் பொருள், அறிவித்தால் மட்டும் அறியும் பொருள், அறிவித்தாலும் அறியமாட்டாத பொருள் என்பனவாகும். இதனையே சைவ சித்தாந்தம் முறையே பதி, பசு, பாசம் எனக் குறிப்பிடுகின்றது.

இம் மூன்று பொருட்களும் என்றும் உள்ளவை, அழிவில்லாதவை, அநாதி யானவை. இங்கு பதியினைப் பற்றியும், பதிக்கும் பசுவிற்கும் உள்ள தொடர்பினைப் பற்றியும் நோக்குவோம்.

கடவுள் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றார். இறைவன், ஆண்டவன், கடவுள், பசுபதி, பரம்பொருள் என்பன அவற்றுள் சிலவாகும். கடவுளுக்கு இரண்டு நிலைகள் கூறுப்படுகின்றன. அவை,

1. **சொரூபலக்கணம்**
2. **தடத்தலக்கணம்** என்பனவாகும்.

## சொரூபலக்கணம்

இது இறைவனுக்குரிய சிறப்பியல்பாகும். இந்நிலையிலிருக்கும் போது கடவுளுக்குப் பெயர், குணம், குறி எதுவுமில்லை. திரிகரணங்களுக்கும் (மனம், வாக்கு, காயம்) எட்டாத இந்நிலையிலுள்ள கடவுளை, பரமசிவம் என்று குறிப்பிடுவர். இது கடவுளின் ஆனந்தமயமான நிலையுமாகும்.

## தடத்தலக்கணம்

இது இறைவனுக்குரிய பொது இயல்பாகும். சொரூபநிலையிலிருக்கும் இறைவன் ஆன்மாக்களுக்கு அருள்புரியும் நோக்கில், தானாகவே பல படிகள் இறங்கி வரும் நிலையே தடத்தலக்கணமாகும். இந்நிலையில் கடவுளுக்கு குணம், குறிகள் கூறப்படும். அருவம், உருவம், அருவுருவம் என்னும் முத்திருமேனிகள் மூலம், உயிர்களுக்கு அருள் புரிகின்றார். இந்நிலையில் இறைவனுக்கு எண்குணங்களும் கூறப்படுகின்றன. அவை,

தன்வயத்தினராதல்

தூயவுடம்பினனாதல்

இயற்கையுணர்வினனாதல்

இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதல்

பேரருளுடைமை

வரம்பிலின்பமுடைமை

வரம்பிலாற்றலுடைமை

முற்றுமுணர்தல் என்பனவாகும்.

தடத்த நிலையில் கடவுள், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களை, ஆன்மா முத்தியின்பம் பெறுதற் பொருட்டு ஆற்றுகின்றார். இதன்பொருட்டு கடவுள் ஐவகைத் திருமேனிகளையும் கொண்டு நிற்கின்றது. அவை,

படைத்தல் - பிரம்மா

காத்தல் - விஷ்ணு

அழித்தல் - உருத்திரன்

மறைத்தல் - மகேசுவரன்

அருளல் - சதாசிவன்

கடவுளுக்கும் ஆன்மாவுக்கும் (உயிர்கள்) இடையில் பல தொடர்புகள் காணப்படுகின்றன. கடவுளைப் போலவே ஆன்மாக்களும் அநாதியானவை. பதி பேரறிவுடையது. பசு அறிவித்தால் மட்டும் அறியக்கூடியது. ஆன்மாக்கள் பாவங்களில் இருந்து நீங்கி இறை அருளைப் பெற்றே முத்தியடையும். முத்தி நிலையில் பசு இறைவனுடன் இணையும். எனினும் பதியின் இயல்பும் பசுவின் இயல்பும் தனித்தனியே காணப்படும்.

## பாடச் சுருக்கம்

- ❑ சைவசித்தாந்தம் முப்பொருள்கள் பற்றிக் கூறுகின்றது.
- ❑ கடவுள் சொரூபலக்கணம், தடத்தலக்கணம் என இரண்டு நிலைகளை உடையது.
- ❑ சொரூபலக்கணத்தில் கடவுள் குணங்குறிகளற்றுக் காணப்படும்.
- ❑ தடத்தலக்கணத்தில்கடவுளுக்கு, மூவகைத்திருமேனிகளும், எண்குணங்களும், ஐந்தொழில்களும் குறிப்பிடப்படுகின்றன.
- ❑ முத்திநிலையில் கடவுளுடன் ஆன்மாக்கள் இணைந்து காணப்படும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. அறிவிக்காமலே அறியும் பொருள் எது?
2. கடவுளின் இரண்டு நிலைகளும் எவை?
3. இறைவனின் மூவகைத் திருமேனிகளும் எவை?
4. இறைவனுக்கு எத்தனை குணங்கள் கூறப்படுகின்றன?
5. முத்திநிலையில் ஆன்மாவின் நிலை எவ்வாறு இருக்கும்?

## செயற்பாடு

ஆசிரியரின் உதவியுடன் கடவுளின் சிறப்புக்களைக் குறிப்பிடும் தேவார, திருவாசக அடிகளில் ஐந்தினைத் தேடிப்பெற்று, வகுப்பறையில் காட்சிப்படுத்துக. அவற்றினை மனனம் செய்க.

# 14 நாட்டார் (கிராமிய) வழிபாடு



எமது வழிபாட்டு முறைகள் ஆகம நெறிக்குட்பட்ட வழிபாடு, ஆகம நெறிக்குட்படாத வழிபாடு என்று இருவகைப்படும். ஆகமம் சார்ந்த வழிபாட்டில் கிரியைகளும், ஆகமம் சாராத வழிபாட்டில் சடங்குகளும் முக்கியம் பெறுகின்றன. ஆகம நெறிக்குட்படாத வழிபாடு நாட்டார் வழிபாடு, கிராமிய வழிபாடு, சிறு தெய்வ வழிபாடு, குலதெய்வ வழிபாடு, மலைத்தெய்வவழிபாடு, ஊர்த்தெய்வ வழிபாடு, எல்லைப்புற தெய்வ வழிபாடு எனப் பல்வேறு பெயர்களைக் கொண்டு அழைக்கப் படும். நாட்டார் தெய்வங்களை ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள், கற் தெய்வங்கள் என மூன்று வகையாகப் பிரிக்கலாம். இதில் ஆண் தெய்வங்களாக ஐயனார், வைரவர், வீரபத்திரர், பெரிய தம்பிரான், முனியப்பர், காத்தவராயன்,

மதுரைவீரன், ரோதைமுனி, மாடன், கருப்பு சாமி போன்றனவும், பெண் தெய்வங் களாகக் கண்ணகி, காளி, மாரி, திரௌபதி, நாச்சிமார், கொத்தி, பிடாரி போன்றனவும் கற்தெய்வங்களாக எல்லைக்கல், நாட்டார் கல் என்பனவும் அடங்குகின்றன.

நாட்டார் தெய்வ வழிபாட்டில் இடம்பெறும் தெய்வங்களை ஊர்த் தெய்வங்கள், கிராமிய தேவதைகள், காவல் தெய்வங்கள், எல்லைத் தெய்வங்கள் என்றும் அழைப்பர். இந்நாட்டார் தெய்வ வழிபாடு வயல்வெளிகளிலும், பெருந் தெருக்களிலும், ஆற்றோரங்களிலும், குளக்கரைகளிலும், காட்டுப்பகுதிகளிலும், தொழிற்சாலைகளிலும், மலைக் குன்றுகளிலும் என வரையறுக்கப்பட்ட இடமின்றி எல்லா இடங்களிலும் காணப்படும். நாட்டார் தெய்வ வழிபாட்டில் சூலம், கல், தடி, மரம், புற்றுக்கள் குறியீடுகளாக அமையும்.

நாட்டார் தெய்வ வழிபாடு பெருந்தெய்வ வழிபாட்டிலிருந்து வேறுபட்ட இயல்பினைக் கொண்டதாகும். நாட்டார் தெய்வங்கள் மனித உணர்வினால் தோற்று விக்கப்பட்டவையாகும். இவை பிறப்பு, இறப்பு உள்ளவையாகவும், வரையறுத்த ஆற்றலைக் கொண்டவையாகவும், பகைமையை அழிக்கும் தன்மையைக் கொண்டன வாகவும், குடும்பத்திற்கெனப் பிரிக்கப்பட்டவைகளாகவும், பிராமணர்கள் அல்லாத பூசாரிகளால் பூசைகள் செய்யப்படுகின்ற தெய்வங்களாகவும் அமையும்.

இவ்வழிபாட்டில் பூசாரி, குறித்த தெய்வத்தின் உத்தரவு பெற்ற பின்னரே பூசைகளை மேற்கொள்வார். இவ்வழிபாட்டில் பொதுவாக ஊர்காவல் செய்தல், மடைபரவுதல், தூளி பிடித்தல், சந்தனக்காப்பிடுதல், குளிர்த்தி பாடுதல், தெய்வ மாடல், தாலாட்டுப் பாடுதல், பலியிடுதல், நூல் முடிதல், பரிகவம் அழைத்தல், வளந்து வைத்தல், பொங்கலிடுதல், பறையடித்தல், கழிப்புக் கழித்தல், தண்ணீர் ஓதிக்கொடுத்தல், தீ மிதித்தல், குடிவிடுதல் போன்ற அம்சங்கள் காணப்படுகின்றன.

## நாட்டார் வழிபாடு கிராமிய வாழ்க்கையில் பெறும் முக்கியத்துவம்

நாட்டார் தெய்வ வழிபாடு கிராமிய மக்களின் வாழ்க்கையில் மிகவும் முக்கியத்துவம் பெறும் வழிபாடாகும். இவ்வழிபாட்டில் பொதுமக்கள் பூசகரின் உதவியின்றித் தாமே நேரடியாக வழிபாடு செய்யக்கூடியதாக இருக்கும். கிராமிய மக்கள் ஆத்மார்த்தமாக கிரியைகளில் ஈடுபடுவதனால் அவர்களின் ஒழுக்கம் சிறப்பாகப் பேணக்கூடியதாக இருக்கின்றது.

நாட்டார் தெய்வ வழிபாடு கிராமியக் கலைகளை வளர்ப்பதில் முக்கிய பங்கு வகிக்கின்றது. ஆலயத்தில் விழா இடம்பெறும் காலங்களில் காவடி, கரகம், கும்மி, கோலாட்டம், கூத்து, மயிலாட்டம், பாம்பாட்டம், ஒயிலாட்டம், பொய்க்கால் குதிரை ஆட்டம், மோகினி ஆட்டம் முதலான கிராமியக் கலைகள் இடம்பெறும். அத்துடன் கிட்டிப்புள், கிளித்தட்டு, பம்பரமாடுதல், தாயமாடுதல், வாரோட்டம், போர்த்தேங்காய் அடித்தல், சடுகுடு, பாண்டி விளையாடுதல், கண்ணாம்பூச்சி விளையாட்டு, கொக்கான் வெட்டுதல், கொம்பு முறித்தல் போன்ற கிராமிய விளையாட்டுக்களும் விளையாடப்படும். அவற்றினூடாக சமூக ஒற்றுமை, சமூக நீதி, சமூக ஒழுங்கு என்பனவும் பேணி வளர்க்கப்படுகின்றன.

## முனியப்பர் வழிபாடு

தமிழர்கள் நாட்டார் தெய்வ வழிபாட்டில் மிகவும் நம்பிக்கை கொண்டவர்கள். பொதுவாக நாட்டார் தெய்வ வழிபாட்டில் மூன்று விதமான வழிபாடுகளைக் காண இயலும். ஊர்க் காவல் தெய்வ வழிபாடு, கிராமிய தெய்வம் அல்லது கிராம தேவதை வழிபாடு மற்றும் குலதெய்வ வழிபாடு போன்ற வழிபாடுகள் நாட்டார் தெய்வ வழிபாட்டு மரபு எனலாம்.

முனியப்பர் வழிபாடு யாழ்ப்பாண மாவட்டத்திலே தான் பெருவழக்காக இருந்து வருகின்றது. இதற்கான ஆலயம் யாழ்ப்பாண நகரிலுள்ள கோட்டை முனியப்பர் ஆலயம், வல்லை வெளி முனியப்பர் ஆலயம் என்பன ஆகும். ஏனைய பிரதேசங்களில் இத் தெய்வம் ''முனியாண்டி சாமி'' என்று அழைக்கப்பட்டு வருவதும் குறிப்பிடத்தக்கது. யாழ் பிரதேச மக்கள் இதனை முனி என்றும் அழைப்பர். இரவு வேளையில் தனியாக இத் தெய்வம் குடிகொண்டிருக்கும் இடத்தில் செல்வதற்குப் பயப்படுவர். அகால வேளையில் இவ்வாறு செல்லும்போது காய்ச்சல், வயிற்றுக்குத்து போன்ற நோய்கள் ஏற்பட்டால் அங்கு சென்று நூல் முடிந்து நோய்களைக் குணமாக்குவர்.

யாழ்ப்பாணம் கோட்டை முனியப்பர் ஆலயம் பல்லாண்டுகளாக இப்பிர தேச மக்களால் வழிபடப்பட்டு வருகின்றமையை இன்றும் நாம் காணலாம். இத்தெய்வத்தின் மீது துதிப்பாடல்கள் பாடப்பட்ட வரலாறும் உண்டு. வழக்கு, தூரப் பயணம் என்பவற்றில் வெற்றி உண்டாக; இங்குள்ள கோயில் மரத்தின் கிளைகளில் நேர்த்தி வைத்து காசு கட்டுகின்ற வழக்கம் தொடர்ந்தும் கையாளப்பட்டு வருவது இத்தெய்வத்தின் மீது இப்பிரதேச மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையை

எடுத்துக் காட்டுவதாக அமைகின்றது. சாதாரண சிறு கட்டிடத்தில் முனியப்பர் குடிகொண்டிருப்பதை இன்றும் காணலாம்.

## காளி வழிபாடு

சக்தியின் தோற்றங்களில் ஒன்று காளி. வீரமாகாளி, பத்திரகாளி, சுடலைக் காளி எனும் பெயர்களால் அடியார்கள் காளியைப் போற்றி வழிபடுகின்றனர். காளி என்பவள் கரிய நிறத்தை உடையவள் என்பது பொருள். காளி வழிபாடு மிகப்பழைமை வாய்ந்தது. போருக்குப் புறப்படுவதற்கு முன் வீரர்கள், பலிகொடுத்து வழிபடும் வழக்கம் தமிழ் மக்களிடம், இருந்தது. காளி மங்களம் தருபவள், நோய்களிலிருந்து மக்களைக் காப்பவள், தடைகள் துன்பங்களை நீக்கி அடியார்களைக் காப்பவள், பகைவர்களை அழிப்பவள். இத்தகைய நம்பிக்கையால் மக்கள் காளியை வழிபட்டு அத்தெய்வத்தின் அருளைப் பெறுகின்றனர்.

காளியம்மன் வழிபாட்டில் நேர்த்தி வைத்தல், பொங்கல், படையல் என்பன இடம்பெறுகின்றன. யாழ்ப்பாணத்து மக்கள் சுகப்பிரசவம் வேண்டி காளியின் பிரதிநிதியாக கொத்தியை வழிபட, மட்டக்களப்பு மக்கள் அதற்காக காளியம்மனையே வழிபடும் மரபு காணப்படுகின்றது. காளியம்மன் வழிபாடு யாழ்ப்பாணம், வன்னி, வவுனியா, திருகோணமலை, மட்டக்களப்பு, பதுளை, சிலாபம், நீர் கொழும்பு, கொழும்பு, மாத்தளை முதலான பிரதேசங்களில் சிறப்பாக இடம்பெறுகின்றது. இவற்றில் ஆகம முறையில் அமைந்த ஆலயங்களும் அடங்கும்.

தமிழர் மத்தியில் விசுவ குல மக்களுக்கும் காளி வழிபாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றது. மட்டக்களப்பு, யாழ்ப்பாணம், திருகோண மலை முதலான இடங்களில் இதனை அவதானிக்கலாம். ஏறாவூர் பத்திரகாளியம்மன் ஆலயம், போரைதீவு காளிகோயில், அன்னமலை காளி கோயில் என்பவற்றை இதற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம்.

## பாடச் சுருக்கம்

- எமது வழிபாடு ஆகமம் சார்ந்த, ஆகமம் சாராத வழிபாடு என இரு வகைப்படும்.
- ஆகம நெறிக்குட்படாத வழிபாடு நாட்டார் வழிபாடு என அழைக்கப்படும்.
- நாட்டார் வழிபாடு பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது.
- நாட்டார் வழிபாடு கிராமிய மக்களின் வாழ்க்கையில் மிகவும் முக்கியத்துவம் பெறும் வழிபாடாகும்.
- நாட்டார் தெய்வங்களை ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள், கற்தெய் வங்கள் என வகைப்படுத்துவர்.
- நாட்டார் தெய்வ வழிபாட்டில் சூலம், கல், தடி, மரம் போன்றவை அடையாளமாக விளங்குகின்றன.
- நாட்டார் தெய்வ வழிபாட்டில் காளி, முனியப்பர் காவல்த் தெய்வமாக வழிபடப்படுகின்றன.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஆகமம் சாராத வழிபாடு என்றால் என்ன?
2. நாட்டார் தெய்வ வழிபாடு சிறப்புப் பெறுவதற்குக் காரணம் யாது?
3. நாட்டார் தெய்வங்களை வகைப்படுத்திக் காட்டுக.
4. நாட்டார் வழிபாட்டின் மூலம் நீர் பெற்றுக்கொண்ட பயன்கள் எவை?
5. முனியப்பர் வழிபாடு சிறப்பாக நடைபெறும் பிரதேசங்களைக் குறிப்பிடுக.
6. காளியம்மன் வழிபாட்டின் போது மேற்கொள்ளும் சடங்கு முறைகளைக் குறிப்பிடுக.
7. நாட்டார் தெய்வங்களை வழிபடுவதனால் ஏற்படும் சமூக நன்மைகள் இரண்டினைத் தருக.

## பயிற்சிகள்

**பொருத்தமான சொற்களைக் கொண்டு இடைவெளிகளை நிரப்புக.**

**கரிய, கிராமிய வழிபாடு, கிராமிய , பூசாரி**

1. ஆகமநெறிக்குட்படாத வழிபாடு ______________________ என அழைக்கப்படும்.
2. சிறுதெய்வ வழிபாடு ______________________ கலைகளை வளர்ப்பதில் முக்கிய பங்காற்றுகிறது.
3. காளி ______________________ நிறத்தை உடையவள் என்பது பொருள்.
4. நாட்டார் தெய்வ வழிபாட்டில் ஆண்டுப் பொங்கலை ______________________ மேற்கொள்வார்.

## செயற்பாடு

1. முனியப்பர், காளி தொடர்பான கதைகளை ஆசிரியருடன் கலந்துரையாடுக.
2. முனியப்பர், காளி வழிபடப்படும் இடங்கள், வழிபாட்டு முறைகள், வேறு பெயர்கள் என்பவற்றை உள்ளடக்கிய அட்டவணையைத் தயாரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# 15 இலங்கையில் சைவ சமய வளர்ச்சி

திருமூலரால் ‘சிவபூமி’ எனச் சிறப்பித்துப் போற்றப்படும் இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே சைவம் தழைத்தோங்கியிருந்தது. திரு. ஜே. டபிள்யூ. ரெனற் என்பவர் எழுதிய இலங்கைச் சரித்திர நூலில், ‘இலங்கையில் ஆதியில் வாழ்ந்தவர்கள் சைவர்களே’ எனக் குறிப்பிடுகின்றார். புகழ்பெற்ற தொல்பொருள் ஆய்வாளரான சேர். வில்லியம் ஜோன்ஸ் என்பவர், ‘எமது எண்ணத்திற்கு எட்டாத காலந்தொடக்கம் இலங்கையில் சைவமக்கள் வாழ்ந்து வந்திருக்கின்றனர்’ என்று கூறுகின்றார்.

இலங்கையின் பூர்வீகக் குடிகளாக வாழ்ந்த இயக்கரும், நாகரும் சிவ வழிபாட்டில் சிறந்து விளங்கினர். நாகர்களால் சிறப்புறப் போற்றி வணங்கப்பட்டு வந்த தலமாகத் திருக்கேதீஸ்வரம் திகழ்கின்றது. திருக்கேதீஸ்வர நாதருக்கு ‘நாகநாதர்’ என்ற பெயர் இன்றளவும் வழங்கி வருவதிலிருந்து இதனை நன்குணரலாம். இயக்கர் வம்சத்தைச் சேர்ந்த இராவணன் சிறந்த சிவபக்தனாக விளங்கினான். மேலும் மாதுவட்டா, விசுவகர்மா, மயன், குபேரன், மண்டோதரி முதலியோரும் சிவபக்தர் களாக விளங்கியிருக்கின்றனர். மண்டோதரி வரம்பெற்ற வரலாற்றை,

உந்து திரைக்கடலைக் கடந் தன்(று)
    ஓங்கு மதில் இலங்கை யதனிற்
பந்தணை மெல்விரலாட் கருளும்
    பரிசறிவா ரெம்பிரா னாவாரே’

என்று மணிவாசகப் பெருமான் பாராட்டிப் பாடியமையிலிருந்து அறிந்து கொள்ளலாம். மேலும் திருநீற்றின் பெருமையைப் பாடப் புகுந்த திருஞானசம்பந்தர், ‘இராவணன் மேலது நீறு’ என்று பாடியிருப்பதும் இலங்கையில் சைவத்தின் தொன்மையை எடுத்தியம்புவதாக உள்ளது. எனவே நாயன்மார்களின் காலத்திற்கு முற்பட்ட காலத்திலும் இலங்கையில் சைவம் நிலைபெற்றிருந்தமை தெளிவாகின்றது.

இராவணன் தன் தாயின் அபரக்கிரியைகள் செய்வதற்காக அமைக்கப் பெற்றதே திருகோணமலையிலுள்ள 'கன்னியா தீர்த்தம்' எனத் தட்சிண கைலாய புராணம் கூறுகின்றது. மேலும் முன்னேஸ்வரம் என்னும் சிவத்தலத்தை இராமர், வியாசர் முதலானோரும் வேறு பல முனிவர்களும் வழிபட்டனர் எனவும் தட்சி ணகைலாய புராணம் கூறுகின்றது.

பண்டுகாபய மன்னன் அநுராதபுர நகரை அமைத்த போது 'சிவிகசாலை', 'சொத்திசாலை' என்னும் நிலையங்களை அமைத்தான் என்று மகாவம்சம் கூறுகின் றது. இவற்றுள் சிவிகசாலை என்பது சிவலிங்கத்தைத் தாபித்து வழிபடும் கோட்டம் என்று அதன் உரைநூலான வம்ஸத்தப்பகாஸினி விளக்குகின்றது. சொத்திசாலை என்பது பிராமணர்கள் வேதம் ஓதுவதற் கென்று அமைக்கப்பட்டது என்று அறிஞர் கருதுவர்.

பௌத்தசமயம் பரப்பப்படுவதற்கு முற்பட்ட காலத்திலேயே 'சிவ' என்ற பெயருடைய பலர் இருந்திருக்கின்றனர். பண்டுவாசுதேவனின் குமாரரில் ஒருவன் 'சிவ' என்றும், பண்டுகாபயனின் மாமன்மாருள் ஒருவன் 'கிரிகந்த சிவ' என்றும், அசேலனின் சகோதரர் எண்மருள் ஒருவன் 'மஹாசிவ' என்றும், தேவநம்பியதீசனின் தகப்பன் 'மூத்தசிவன்' என்றும் காணப்படுவதிலிருந்து ஆதிகால அரசர்கள் சைவர் களாயிருந்தமையை அறிந்து கொள்ளலாம்.

போர்த்துக்கேய வரலாற்றாசிரியராகிய 'குவெறோஸ்' என்பவர் தாம் எழுதிய இலங்கைச் சரித்திரம் பற்றிய நூலில் கி. மு. 1300 ஆம் ஆண்டில் திருக்கோணேஸ்வரர் கோயில் கட்டப்பட்டதெனக் கூறும் கல்வெட்டொன்று இருந்தது எனக்கூறுகின்றார்.

உருகுணைத் தேசியப் பூங்காவில் கண்டெடுக்கப்பட்ட கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்ததெனக் கருதப்படும் கல்வெட்டொன்றில் 'சிவநகர்' என்ற இடப்பெயர் குறிக்கப்பட்டிருப்பதில் இருந்து இலங்கையில் சைவத்தின் தொன்மை தெற்றெனப் புலப்படும். 'போல் பீரிஸ் என்பவர் கூறியதாவது,

'விஜயன் இலங்கைக்கு வருவதற்கு அதிக காலத்திற்கு முன்னரே இலங்கையிற் கருத்திற் கொள்ளத்தக்கனவும் முழு இந்தியாவின் வழிபாட்டிற்கு உரியனவாகவும் ஐந்து சிவாலயங்கள் இருந்தன. இவற்றுள் சிலாபத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த முன்னேஸ்வரம், மாதோட்டத்திற்கு அருகிலுள்ள திருக்கேதீஸ்வரம், பெரிய கொட்டி யாரக் குடாவுக்கு எதிராகவுள்ள திருக்கோணேஸ்வரம், காங்கேசன்துறைக்கு அண்மை யிலுள்ள நகுலேஸ்வரம் என்பவை குறிப்பிடத்தக்கவை;

மேலும், தென்மேற்கே புகழ்பெற்ற சந்திரசேகர ஈஸ்வரத்தை இவர் குறிக்கத் தவறி இருப்பினும் இலங்கையில் புகழ்பெற்ற சிவாலயங்கள் திகழ்ந்தமை கண்கூடு. மகாவம்சமும் இலங்கையில் திருக்கோணேஸ்வரம், திருக்கேதீஸ்வரம், முன்னேஸ்வரம், நகுலேஸ்வரம், சந்திரசேகர ஈஸ்வரம் என்ற ஐந்து சிவாலயங்கள் திகழ்ந்ததாகக் குறிப்பிடுகின்றது. இலங்கையின் தேவாரப்பாடல் பெற்ற தலங்களாகத் திருக்கேதீஸ்வரமும், திருக்கோணேஸ்வரமும் விளங்குகின்றன. சம்பந்தப் பெருமான்,

'கேதீச்சரம் கைதொழக் கடுவினையடையாவே', என்றும்

'கேடிலாத கேதீச்சரந் தொழுதெழக் கெடுமிடர் வினைதானே'

என்றும் கேதீச்சரத் தலச்சிறப்பைப் பாடியுள்ளார்.

சுந்தரமூர்த்தி நாயனார், 'வங்கம்மலிகின்ற கடல் மாதோட்ட நன்னகர்', 'மாவின் கனி தூங்கும் பொழில் மாதோட்ட நன்னகர்' என்றெல்லாம் சிறப்பித்துப் பாடியுள்ளார். அப்பர் பெருமானின் திருவீழிமிழலைப் பதிகத்திலும் திருக்கேதீஸ்வரத்தைப் பற்றிய குறிப்புண்டு.

'பூதியணி பொன்னிறத்தார் பூண்நூலர்
பொங்கரவர் சங்கரர் வெண்குழையோர் காதர்
கேதீச்சர மேவினார் கேதாரத்தார்

எனப்பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. திருக்கோணேஸ்வரத்தைப் பாடிய ஞானசம்பந்தர், 'கோயிலுஞ் சுனையும் கடலுடன் சூழ்ந்த கோணமாமலை யமர்ந்தாரே' எனப் போற்றுகின்றார்.

சைவசமய வளர்ச்சியின் பொற்காலமாகக் கருதப்படும் சோழர் ஆட்சிகாலத்தின் போது (கி.பி 10 ஆம், 11 ஆம் நூற்றாண்டு) இலங்கையிலும் பல சிவாலயங்கள் அமைக்கப்பட்டன. இராஜராஜ சோழன் காலத்திலும் இராஜேந்திர சோழன் காலத் திலும் சிறந்த முறையில் பல சிவாலயங்கள் தோற்றம் பெற்றன. இராஜராஜ - ஈஸ்வரம், திருவீராமேஸ்வரம், உத்தம சோழ - ஈஸ்வரம், பண்டித சோழ - ஈஸ்வரம் போன்ற சிவாலயங்களுடன் ஜனநாதமங்கலம் எனப் புனர்நாமம் பெற்ற பொலனறுவை வானவன் மாதேவி - ஈஸ்வரம் உட்படப் பத்துச் சிவாலயங்கள் கட்டப்பட்டதாகக் கூறப்படுகின்றது.

கி.பி 13 ஆம் நூற்றாண்டளவில் யாழ்ப்பாண ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்திலும் சைவம் இலங்கையில் தழைத்தோங்கி வளர்ந்தது. கி.பி 1410 இல் அரசோச்சிய குணசிங்க ஆரியன், திருகோணமலையிலிருந்து கொண்டு சென்ற கருங்கற்களால் இராமேஸ்வரக் கர்ப்பக்கிரகத்தைக் கட்டுவித்தான். கோயிற் கர்ப்பக் கிரகத்தில் பதிக்கப்பட்டிருக்கும் சாசனம் மூலம் இதனை அறியலாம். மேலும் இவ்வாரியச் சக்கரவர்த்தியின் சேது காவலர் என்ற விருதுப் பெயருடனும் முத்திரைக் காசுகளில் சேது என்ற எழுத்துடன் சிவபெருமானின் வாகனமாகிய நந்தியும் இருக்கக் காணலாம்.

அந்நியர் இலங்கையைக் கைப்பற்றி ஆட்சி செய்யத் தொடங்கிய காலம் முதல் சைவ சமயம் வீழ்ச்சியடையத் தொடங்கியது. தனித்துவமாகச் சிறந்து விளங்கிய சைவ சமயத்தின் வரலாறுகள் திட்டமிட்டுச் சிதைக்கப்பட்டன. போர்த்துக்கேயர் ஆட்சி தொடங்கியபின் ஒல்லாந்தர், ஆங்கிலேயர் என அந்நியர் ஆட்சியில், புகழ்பெற்ற சிவாலயங்கள் அழித்தொழிக்கப்பட்டன. சைவசமயம் நலிவைச் சந்தித்த காலத்தில் கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரும், அவருக்குப் பின்வந்த சமயப் பெரியார்களும் சைவசமயம் மீண்டும் மறுமலர்ச்சி அடைய அரும்பாடுபட்டனர்.

அழிக்கப்பட்ட புராதன ஆலயங்கள் சில மீண்டும் புத்துயிர் பெற்றன. சைவ சமயம் மீண்டும் எழுச்சி பெற்று வளர்ந்தது. சைவ சமயத்தையும் அதன் பாரம்பரியத்தையும் பாதுகாத்து மேலும் செழிக்கச் செய்வது எதிர்காலச் சைவ சந்ததியினரின் கைகளில் தங்கியுள்ளது.

**மேன்மை கொள் சைவநீதி**
**விளங்குக உலகமெலாம்!**

## பாடச் சுருக்கம்

- இலங்கையில் சைவ சமயம் மிகவும் தொன்மையானது.
- இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் என்பன இலங்கையில் சைவசமய தொன்மையையும், வழிபாடுகளையும் கூறுகின்றன.
- திருக்கேதீஸ்வரத்தினை நாகர்கள் சிறப்பாக வழிபட்டனர்.
- முன்னேஸ்வரத்தினை இராமரும், வியாசரும் வழிபட்டதாக தட்சண கைலாய புராணம் கூறுகின்றது.
- திருக்கோணேஸ்வர ஆலயம் இராவணனால் சிறப்பாக வழிபடப்பட்டு வந்தது.
- விஜயன் இலங்கைக்கு வருவதற்கு முன்பே திருக்கேதீஸ்வரம், திருக் கோணேஸ்வரம், முன்னேஸ்வரம், நகுலேஸ்வரம், சந்திரசேகர ஈஸ்வரம் என்னும் பஞ்ச ஈஸ்வரங்கள் காணப்பட்டன.
- திருக்கேதீஸ்வரம், திருக்கோணேஸ்வரம் என்பன நாயன் மார்களால் பாடல் பெற்ற தலங்களாகும்.
- சோழர் ஆட்சிக் காலத்தில் பல சிவாலயங்கள் அமைக்கப்பட்டன.
- யாழ்ப்பாண ஆரிய சக்கரவர்த்திகளின் காலத்திலும் இலங்கையில் சைவசமயம் செழித்தோங்கி வளர்ந்தது.
- போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் போன்ற அந்நியர் ஆட்சிக் காலத்தில் இலங்கையின் சைவசமயப் பாரம்பரியம் நலிவைச் சந்தித்தது.
- 19 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் மீண்டும் இலங்கையில் சைவம் தழைக்க வழிசமைத்தார்.
- போர்க்காலச் சூழ்நிலையில் பாதிப்புகள் ஏற்பட்டாலும் சமயப் பெரியார்கள், சமய நிறுவனங்கள் ஊடாக சைவப் பாரம்பரியங்கள் பாதுகாக்கப்பட்டு வளர்க்கப்பட்டு வருகின்றன.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இலங்கையைச் சிவபூமி எனச் சிறப்பித்துக் கூறியவர் யார்?

2. அ) இலங்கையில் பாடல் பெற்ற தலங்கள் எவை?
   ஆ) இத்தலங்களைப் பாடிய நாயன்மார்கள் யாவர்?

3. திருகோணமலையிலுள்ள கன்னியா தீர்த்தத்தை அமைத்தவர் யார்?

4. இலங்கையில் காணப்பட்ட புராதன ஈஸ்வரங்கள் ஐந்தும் எவை?

5. யாழ்ப்பாண ஆரியச் சக்கரவர்த்திகளின் முத்திரைக் காசுகளில் பொறிக்கப் பட்டிருப்பவை எவை?

6. இலங்கையில் சைவத்தின் தொன்மையைப் பற்றி ஆராய்ந்த வரலாற்றாசிரியர்கள் இருவரைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

இலங்கையில் சைவத்தின் தொன்மையை அறிய உதவும் ஆதாரங்களைப் பட்டியற்படுத்துக.

# 16 இலங்கையிலுள்ள சைவ ஆலயங்கள்

## நகுலேச்சரம்



இலங்கையின் வடபால் யாழ்ப்பாண மாவட்டத்தில் யாழ்ப்பாண நகரிலிருந்து வடமேற்குத் திசையில் ஏறத்தாழ இருபது கிலோமீற்றர் தொலைவில் நகுலேச்சரம் என்னும் சிவத்தலம் அமைந்துள்ளது. இது கீரிமலை எனுமிடத்திலுள்ளது. இது மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமையப்பெற்ற சிறப்புமிக்க புராதன தலமாகும்.

இலங்கையை ஆட்சி செய்த முதல் சிங்கள அரசன் விஜயன் ஆவான். இவன் இந்து சமயத்தவனென்றே வரலாற்று நூல்கள் குறிப்பிடுகின்றன. இலங்கையின்

நான்கு எல்லைகளிலும் நான்கு ஈச்சரங்களைக் கட்டுவித்தான். வடக்கே கீரிமலையில் கட்டப்பட்ட ஆலயம் தான் திருத்தம்பலேஸ்வரம் என யாழ்ப்பாண வைபவ மாலை குறிப்பிடுகிறது. கீரிமலைக்கு கந்தருவநகர், வீணாகான புரம் எனும் பெயர்களும் வழங்கப்பட்டிருந்தது.

நகுலேச்சரத் தலத்தின் இறைவன் நகுலேசுவரர். இறைவி நகுலாம்பிகை. தலவிருட்சம் வில்வமரமாகும். கீரிமலைத் தீர்த்தம், சாகர சங்கம தீர்த்தம், கண்டகி தீர்த்தம், கங்கா சமுத்திர சங்கமம் எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகிறது.

## தீர்த்தச் சிறப்பு




கீரி என்பதைக் குறிக்கும் வடசொல் நகுலம் என்பதாகும். வேடன் ஒருவன் முனிவரின் சாபத்திற்கு ஆளாகி கீரி முகமானான். அவன் முனிவரிடம் சாபவிமோசனம் தருமாறு வேண்டினான். முனிவர் இரக்கம் கொண்டார். இலங்கைக்குச் சென்று கீரிமலைத் தீர்த்தத்தில் நீராடி நோய் தீர்க்குமாறு அருளினார். கர்மயோகப் பயிற்சியும் வழங்கினார். அவன் கீரிமலை தீர்த்தத்தில் நீராடி கீரிமுகம் நீங்கப் பெற்றான். கீரி முகம் நீங்கிய இடம் கீரிமலை என்றும் நகுலகிரி என்றும் வழங்கப்பட்டு நகுலேச்சரம் என்று அழைக்கப்படுகிறது.

சோழ இளவரசியாகிய மாருதப்புரவீகவல்லி குன்ம நோயினால் வருந்தினாள். இந்நோய் வயிற்றுக் குடலைப் பாதித்தது. அவளால் உணவு உண்ணமுடியவில்லை;

உறங்கவும் முடியவில்லை; உடல் மெலிவடைந்தது. அதனால் முகஞ்சுருங்கி, குதிரை முகம் போலாயிற்று. நோயை மருந்துகளால் குணப்படுத்த முடியவில்லை. எனவே இந்தியா விலுள்ள புண்ணிய தலங்களுக்குச் சென்று தீர்த்தமாடினாள். நோய் தீரவில்லை. ஒரு நாள் சாந்தலிங்க சுவாமியைத் தரிசித்தாள்.

அவர், அவளை இலங்கையிலுள்ள புண்ணிய தலத்தில் தீர்த்தமாட ஆசி கூறினார். மாருதப்புரவீகவல்லி கதிர்காமம் சென்று மாணிக்க கங்கையில் நீராடினாள். முருகனிடம் குறையிரந்தாள். முருகன் கனவிலே தோன்றி, கீரிமலைச் சுனையில் தீர்த்தமாடி நோய் தீர்க்கக் கூறினார். இளவரசி கோயிற்கடவை என்ற இடத்தில் வாடி வீடமைத்துத் தங்கியிருந்து தினமும் கீரிமலைத் தீர்த்தத்தில் நீராடி நகுலாம்பிகை சமேத நகுலேசுவரரை வழிபட்டு வந்தாள். நோய் தீர்ந்தது. குதிரை முகமும் நீங்கி அழகுப் பொலிவுடன் விளங்கினாள்.

## பூசைகளும் விழாக்களும்

கடற்கோளினால் அமிழ்ந்தும், போர்த்துக்கேயரால் தரைமட்டமாக்கப்பட்டும் காணப்பட்ட ஆலயம், ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் கி.பி 1878 இல் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரின் வழிகாட்டலில் புனர்நிர்மாணம் செய்யப்பட்டது. பின் 1990. 10. 16 ஆம் திகதி கேதாரகௌரி விழாவின் போது விமானக் குண்டுவீச்சிற்கு இலக்காகி மீண்டும் அழிவிற்குள்ளானது.

பின் 1998 ஆம் ஆண்டு மகாசிவராத்திரி தினத்தன்று வழிபாடு இடம் பெற்றது. ஆடி அமாவாசை தினத்தன்றும் சிறப்பான பூசைகள் இடம் பெறுகின்றன. மாசி மாத சிவராத்திரி தினத்தில் தேர்த்திருவிழாவும் மறுநாட் காலையிலே தீர்த்த உற்சவமும் நடைபெறுகின்றது. அதற்கு முன் 15 நாட்களுக்கு மகோற்சவம் நடைபெறும்.

## நூல்கள்

யாழ்ப்பாண வைபவமாலை, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் சரித்திரம், நகுலேச புராணம், நகுலேஸ்வரமான்மியம், நகுமலைக்குறவஞ்சி, நகுலேஸ்வர பூங்கொத்து, நகுலேஸ்வரர் சாதகம், நகுலேஸ்வரர் ஊஞ்சல் முதலிய நூல்கள் இவ்வாலயத்தின் பழைமை பற்றிக் கூறுகின்றன.

## பாடச் சுருக்கம்

- விஜயனால் கட்டப்பட்ட பழைமை வாய்ந்த ஆலயம் என வரலாற்று நூல்கள் குறிப்பிடுகின்றன.
- இவ்வாலயம் மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் சிறப்புக்களைக் கொண்டது.
- மாருதப்புரவீகவல்லி எனும் அரசி தனது குதிரை முகம் நீங்கி இவ்வாலயத்தையே வழிபட்டுள்ளாள்.
- கடல்கோளாலும், போர்த்துக்கேயராலும் இக்கோயில் அழிப்பட்டிருந்தாலும், தற்போது கம்பீரமாகக் காட்சி தருகின்றது.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நகுலேச்சரம் எங்கு அமைந்துள்ளது ?
2. நகுலேச்சரத்தில் வீற்றிருக்கும் இறைவனின் பெயர் யாது ?
3. நகுலேச்சரம் எனப் பெயர் வரக்காரணம் யாது ?
4. நகுலேச்சரம் பற்றிக் கூறும் நூல்கள் எவை ?

## செயற்பாடு

இலங்கையிலுள்ள ஈச்சரங்கள் தொடர்பான தகவல்களைச் சேகரித்து அட்டவணைப்படுத்துக.

# தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயம்



தெல்லிப்பளை துர்க்காதேவி ஆலயம் உலகெங்குமுள்ள சக்தி உபாசகர்களால் ஏற்றிப் போற்றப்படும் ஆலயமாக விளங்குகின்றது. யாழ்ப்பாணத்தில் காங்கேசன் துறைக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் தெல்லிப்பளை என்னும் கிராமத்தில் இவ்வாலயம் அமைந்துள்ளது. இருநூற்றி ஐம்பது ஆண்டுகள் பழைமை கொண்ட இவ்வாலயம், பதினெட்டாம் நூற்றாண்டில் நிர்மாணிக்கப்பட்டது. 1865, 1981 ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற கும்பாபிஷேகங்களின் மூலம் இவ்வாலயம் பிரசித்தி பெற்றது.

கதிர்காமர் என்னும் தேவி உபாசகரால் வேதாரணியத்தில் இருந்து எடுத்து வரப்பட்ட ஸ்ரீசக்கரமே ஆரம்பத்தில் வழிபடப்பட்டது. எனினும் தற்போது மூலஸ் தானத்தில் துர்க்கையம்மன் மூல மூர்த்தியாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபடப்பட்டு வருகின்றார். இங்கு அடியார்கள் தாம்பாளத்தில் ஸ்ரீசக்கரப் பூசை செய்து வழிபடுவர். இங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீ துர்க்காதேவி சகல வல்லமை படைத்தவளாக, வேண்டியவற்றை வேண்டியாங்கு பக்தர்களுக்குக் கொடுப்பவளாக விளங்குவதால், தாயைத்தேடி ஓடும் கன்றைப்போல் துர்க்கை அம்மனை நாடிப் பக்தர்கள் ஓடுகின்றனர்.

இவ்வாலயத்தின் தீர்த்தம் '**துர்க்கா புஸ்கரணி**' என்பதாகும். இது நன்கு திட்டமிடப்பட்டுத் தெப்பக்கேணியாக அமைக்கப்பட்டுள்ளது. **இலுப்பை மரம்** இவ்வாலயத்தின் தலவிருட்சமாகும்.

இவ்வாலயத்தில் ஆவணித் திருவோணத்தைத் தீர்த்தமாகக் கொண்டு பன்னிரு நாட்கள் மகோற்சவம் நடைபெறும். அத்துடன் நவராத்திரி, சிவராத்திரி, பௌர்ணமி, மாசிமகம், கார்த்திகைத் திருவிளக்கு, செவ்வாய் நோன்பு என்பனவும் இங்கு சிறப்பாக நடைபெறும்.

துர்க்காபுரம் மகளிர் இல்லம், அன்னபூரணி மண்டபம், நூலகம், அச்சகம் முதலிய சேவை நிறுவனங்களை நிருவகிப்பதன் மூலம் தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயம், பல சமூகப்பணிகளைச் செய்து வருகின்றது. இப்பணிகளுக்கு சிவத்தமிழ்ச் செல்வி தங்கம்மா அப்பாக்குட்டியின் முயற்சியும் பங்களிப்பும் போற்றத் தக்கது.

## பாடச் சுருக்கம்

- இவ்வாலயம் பதினெட்டாம் நூற்றாண்டில் ஆரம்பிக்கப்பட்டது.
- இவ்வாலயத்தில் ஆரம்பத்தில் வேதாரணியத்தில் இருந்து எடுத்து வரப்பட்ட ஸ்ரீசக்கரமே வழிபடப்பட்டது.
- இவ்வாலயம் மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்புக்களைக் கொண்டது.
- பன்னிரு நாட்கள் இங்கு மகோற்சவம் இடம்பெறும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயத்தின் அமைவிடத்தைத் தருக.
2. இவ்வாலயத்தில் ஆரம்பத்தில் எதனை வைத்து வழி பாடியற்றினார்கள்?
3. இவ்வாலயத்தின் தீர்த்தம் எது?
4. இவ்வாலயத்தின் விருட்சம் எது?
5. இவ்வாலயத்தில் எத்தனை நாட்களுக்கு மகோற்சவம் இடம்பெறும்?

## செயற்பாடு

இவ்வாலயம் தொடர்பான படங்களைத் தேடித்தொகுத்து வகுப்பறையில் காட்சிப்படுத்தவும்.



இலங்கையில் வரலாற்றுப் புகழ்வாய்ந்த விநாயகர் ஆலயங்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் மருதடி விநாயகர் ஆலயமும் ஒன்றாகும். இவ்வாலயம் யாழ்ப்பாணக் குடா நாட்டில் உள்ள மானிப்பாய் முக்கோணத்திடர் என்னுமிடத்தில் அமைந்துள்ளது.

மானிப்பாய் மருதடி விநாயகர் ஆலயம் யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்திற்கு முற்பட்டதாகும். இவ்வாலயம் போர்த்துக்கேயர் காலத்தில் இடிக்கப்பட்டது. எனினும் மறைவாக பூசைகள், வழிபாடுகள் நடைபெற்று வந்தன. அதனைக் கண்ட தியாகராயக் குருக்கள் அடியார்களின் வழிபாட்டுக்காக விநாயகர் சிலை ஒன்றை தல விருட்சமாகிய மருத மரத்தின் கீழ் வைத்துப் பூசை செய்து வந்தார். அத்திருவுருவமே தற்போது ஆலயத்தில் வெள்ளைக் கல்லினால் சுத்தமாகப் பொளியப்பட்டுள்ளது. அத்துடன் அதிஸ்டானம், பாதம், மஞ்சம், கண்டம், பண்டிகை, ஸ்தூபி என்னும் ஆறு அம்சங்களும் அமையப்பெற மேற்கே வைக்கப்பட்டு பூசை செய்யப்படுகிறது.

இவ்வாலயத்தில் எழுந்தருளியிருக்கும் விநாயகரை வீரகத்தி விநாயகர் என்று அழைப்பர். சித்திரை வருடப்பிறப்புத் தினத்தில் இரத உற்சவம் நடைபெறுகின்றது. இது சூரியசித்தாந்தம் பதினெட்டில் ஆரியப்பட்டர் நிர்ணயித்த காலக்கணிதமாகும். கொடியேற்றத்துடன் சித்திரைத்திங்கள் முதலாம் நாள் தேர்த்திருவிழாவும், மறுநாள் தீர்த்தத் திருவிழாவும் நடைபெறும். பதினெட்டுத் தினங்கள் உற்சவம் நடைபெறும். மற்றும் விநாயகர் சதுர்த்தி, விநாயகர் சஷ்டி ஆகிய விரத காலங்களில் சிறப்புப் பூசை நடைபெறும்.

தற்காலத்தில் இந்தியச் சிற்பக் கலைஞர்களை அழைத்து, மாமல்லபுரச் சிற்பக்கலைஞன் செ.ஞானகீர்த்தி அவர்களின் தலைமையில் சிவாகம நெறிமுறை களுக்கு அமைய நிர்மாணிக்கப்பட்டுள்ளது. கருங்கற்களாலான கருவறை அமைப் பைக் கொண்டும், சோழர்கால திராவிடக் கட்டிடக்கலை அம்சங்களைக் கொண்டும் அமைக்கப்பட்டுள்ளது. புதிய ஆலய புனரமைப்பு மிகவும் விசாலமான அமைப்பாகக் காணப்படுகின்றது.

இலங்கையிலுள்ள சைவ ஆலயங்களில் அமைக்கப்பட்டுள்ள மணிகளில் மானிப்பாய் மருதடி விநாயகர் ஆலய காண்டாமணியும் சிறப்பானது. இதை ஒருமுறை இயக்கினால் தானாகவே ஐந்து நிமிடம் வரை ஒலிக்கும். அரியகுட்டி உபயம் எனும் மணிக்கூட்டுக் கோபுரமும் பிரமாண்டமானது. தீர்த்த மண்டபம் ஆலய வாயுமூலையில் அமைந்துள்ளது. தீர்த்த மண்டப வேலைப்பாடு சிறப்பானது.

மருதடி விநாயகர் கோவில் தேர் மானிப்பாய் மக்களுடன் ஒன்றிணைந்து விட்ட பொக்கிஷம். இது பார் வரிசை முதல் சிங்காசனம் வரை, வைர மரங்கள் கொண்டு இறுக்கப்பட்டுள்ளது. விநாயகர் கோயில் திருப்பள்ளி எழுச்சி பாடல்கள் முறையாக ஆக்கி வெளியிடப்பட்டுள்ளன. இப்பாடல்கள் தினமும் உதய பூசையில் சுப்பிரபாதமாக ஒலிக்க, மருதடியான் அருள்வேண்டி மக்கள் பிரார்த்திப்பர்.

## பாடச் சுருக்கம்

- மருதடி விநாயகர் ஆலயம் வரலாற்றுப் புகழ் வாய்ந்தது.
- மூலஸ்தானம் தொடக்கம் சிற்பவேலைப்பாடுகள் அனைத்தும் கருங்கற்களால் அழகுறக் காட்சி தருகின்றது.
- சித்திரை வருடப்பிறப்பன்று இரத உற்சவம் நடைபெறுகிறது.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. விநாயகர் ஆலயங்களுள் மானிப்பாய் மருதடி விநாயகர் ஆலயம் சிறப்புப் பெறக் காரணம் யாது?
2. மானிப்பாய் விநாயகர் ஆலயத்தில் எப்போது திருவிழா இடம்பெறும்?

## செயற்பாடு

உங்கள் ஊரிலுள்ள விநாயகர் ஆலயங்களுக்குச் சென்று அவை தொடர்பான தகவல்களைச் சேகரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# கொத்துக்குளம் முத்துமாரியம்மன் கோவில்



கிழக்கிலங்கையின் வரலாற்றுப் புகழ்மிக்க அம்மன் ஆலயங்களுள் ஒன்றாகக் கருதப்படும் மட்டக்களப்பு கொத்துக்குளம் ஆலயம் சுமார் 300 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகக் காணப்படுகின்றது. இவ்வாலயம் புளியந்தீவின் வடமேற்கிலே, மட்டக்களப்பு நகர் எல்லையில் கொத்துக்குளம் என்று வழங்கப்பெறும் மண்ணில் அமைந்துள்ளது. இக்கோவிலில் எழுந்தருளியிருக்கும் பராசக்தியை மாரியம்மன் என்றும், மகாமாரியம்மன் என்றும், முத்துமாரியம்மன் என்றும் குறிப்பிடுவர். இக்கொத்துக்குளத்து மாரியம்மன் கோவில்தான் மட்டக்களப்புப் பகுதி முழுவதிலும் அறியப்பெற்ற பழமையான ஒரு மாரியம்மன் கோவில் என்று கூறப்படுகின்றது.

கலிங்க நாட்டில் இருந்து மட்டக்களப்பிற்கு வந்த சக்தி உபாசகர்களான மூன்று சகோதரியர், மாமாங்கை நதியில் நீராடி வழிபட்ட பின், புளியந்தீவின் வடமேல் புறவாவி எல்லையை வந்தடைந்தனர். அவர்கள் அக்காலத்தில் மக்கள் குடியேறியிருந்த கொத்துக்குளத்தில் ஒருவரும், தாண்டவன் வெளியில் இருவருமாகத் தங்கிவிட்டனர் என்றும், முன்னவர் கொத்துக்குளத்தில் நிறுவிய சக்தி வழிபாட்டு நிலையமே முத்து மாரியம்மன் கோவிலாக மாறிற்று என்றும் ஐதீகக் கதைகள் இங்குண்டு.

அம்மனுடைய வருடாந்த சடங்கு முடிவில் உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கம் நீண்டகாலமாக இக்கோவிலில் இருந்து வந்துள்ளது. பேயாட்டத்துடன் கூடிய

இந்தச் சடங்குகளையும், உயிர்ப்பலியிடும் வழக்கத்தையும், நிறுத்த வேண்டும் என்ற எதிர்க்குரல் காலத்துக்குக் காலம் பொதுமக்களிடமிருந்து எழும்பப்பெறுவதுடன் பல தடைவைகளில், அது வலுப் பெறாமல் போனமையும் அடிக்கடி நடந்துள்ளன. இந்நிலையில் 1922 ஆம் ஆண்டில் சடங்குகளின் ஒழுங்கிலே ஏற்பட்ட சில குறைபாடுகளால் சடங்கு செய்யும் வழக்கம் நிறுத்தப்பட்டதோடு, மூன்று வருட காலம் தொடர்ந்து திருவிழாச் செய்யும் நடைமுறையும் இடம்பெறலாயிற்று. இக்காலப் பகுதியில், பக்கத்து ஊர்களில் மழை குறைந்தும், பஞ்சம், பசி, வறுமை, தொற்று நோய்கள், அகால மரணம் முதலானவை பரவலாகத் தோன்றின. இதனை அடிப்படையாகக் கொண்டு, திருவிழாவினைக் கைவிட்டு மீண்டும், சடங்கு முறையினை கொண்டு வந்தனர்.

1948 ஆம் ஆண்டு உயிர்ப்பலியிடாது, சடங்கு மட்டும் இடம்பெறும் நடைமுறையொன்று இங்கு கொண்டு வரப்பட்டதுடன், 1951 ஆம் ஆண்டு முதல் சடங்கின் போது தெய்வமாடும் வழக்கமும் கைவிடப்பட்டது. உயிர்ப்பலிக்குப் பதிலாக அம்மனைப் பூசிப்போர் தத்தம் வீடுகளில் ஆண்டுக்கொரு முறை செய்வது போன்று, சர்க்கரை அமுது கொடுத்துச் செய்யும் பெரும் படையற் பூசை வழக்கம் கொண்டு வரப்பட்டுள்ளது. எனினும் சக்தி வழிபாட்டிற்குரிய வேதாகம முறைகளுக்கமைந்த பூசைகளே கொத்துக்குளத்து மாரியம்மன் கோவிலிலும் இடம்பெறல் வேண்டும் என்ற எண்ணம் மக்கள் உள்ளத்தில் பரவலாக வேரூன்றிக் கிடந்தது. இதன்படி, 1952 ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட தீர்மானத்தின்படி, இவ்வாலயத்தில் இனிமேல் சடங்குகள் செய்வதில்லை என்றும், பதிலாக திருவிழாக்களே நடைபெற வேண்டும் என்றும் நிரந்தர முடிவு எடுக்கப்பட்டது. திருவிழாக்களின் முடிவில் ஆனிப்பூரணையன்று பிள்ளையாரடியிலுள்ள மட்டக்களப்பு வாவிப்பகுதியில் தீர்த்தமாடி வரும் ஒழுங்கும், பின்னர் சர்க்கரை அமுதுப்பூசை நடைபெறுவதும் இன்றுவரை நிலவிவரும் ஓர் அம்சமாகும்.

இவ்வாலயத்தில் வருடாந்தத் திருவிழாவான ஆனிச்சடங்குடன், சித்திரை வருடப்பூசை, தைப்பொங்கல், தைப்பூசம், மாசிமகம், பங்குனி உத்தரம், சித்திரா பூரணை, வைகாசிவிசாகம், புரட்டாதிச்சனி, நவராத்திரி, கார்த்திகை விளக்கீடு, மார்கழித்திருவாதிரை முதலான 52 சிறப்புப் பூசைகள் ஒரு வருடத்தில் இடம்பெறுகின்றன.

மார்கழித் திருவாதிரைத் தினத்தன்று காலைவேளை அம்மனைக் கோவிலில் வீதிவலமாகக் கொணர்ந்து, உள்வீதியின் வடமேற்கு மூலையிலுள்ள தீர்த்தக் கிணற்றடிக்கு வந்ததும், திரைச்சீலையால் மறைப்புக்கட்டி அம்மனுக்குத் திருமுழுக் காட்டுகிற வழக்கமொன்று இத்தலத்தில் நடைமுறையிலிருக்கின்றது. அன்றைய தினம் மஞ்சள் விளையாட்டு நடாத்துவதும், அன்றைய விசேட பிரசாதமாகப் பிட்டு, களி என்பன செய்து அம்மனுக்குப் படைத்தலும் இடம்பெறும். இது போலவே, ஆனிப்பூரணைத் தினத்தன்றும் அம்மன் தீர்த்தமாடுவதற்குப் பிள்ளையாரடிக்குச் சென்று திரும்பும் போது வழியெல்லாம் பக்தர்கள் ஆண், பெண் பேதமின்றி, ஒருவருக்கொருவர் மஞ்சள் நீர் தெளித்து விளையாடி, மகிழ்ந்து, அம்மனுடன் வரும் வழக்கம் இவ்வாலயத்தில் மட்டுமே உள்ள ஒரு வழக்கமாகும்.

## பாடச் சுருக்கம்

- கொத்துக்குளம் அம்மன் ஆலயமே மட்டக்களப்புப் பகுதியில் காணப்படும் அம்மன் ஆலயங்களில் பழமையான ஓர் ஆலயமாகும்.
- சுமார் 300 ஆண்டுகள் பழமை வாய்ந்த ஓராலயமாகும்.
- ஆரம்ப காலங்களில் இங்கு சடங்குகளே முக்கியம் பெற்றிருந்தன.
- இங்கு, 1952 ஆம் ஆண்டுக்குப் பின்னரே, திருவிழாக்கள் முக்கியம் பெறுகின்றன.
- மார்கழித் திருவாதிரை, ஆனிப்பூரணை என்பன இங்கு விசேடமாகக் கொண்டாடப்படும் விழாவாகும்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கொத்துக்குளம் அம்மன் ஆலயத்தின் அமைவிடத்தைத் தருக.
2. கொத்துக்குளம் அம்மன் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் பராசக்தியை வேறு எப்பெயர்களால் அழைக்கின்றனர்?
3. கொத்துக்குளம் அம்மன் ஆலயத்தில் உயிர்ப்பலியிடும் வழக்கம் எப்போது கைவிடப்பட்டது?
4. கொத்துக்குளம் அம்மன் ஆலயத்தில் தெய்வமாடும் வழக்கம் எப்போது கைவிடப்பட்டது?
5. இவ்வாலயத்தில் உயிர்ப்பலிக்குப் பதிலாகப் புதிதாகச் சேர்த்துக் கொள்ளப் பட்ட விடயம் யாது?
6. இவ்வாலயத்தில் மார்கழித்திருவாதிரை கொண்டாடப்படும் முறையைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

கொத்துக்குளம் அம்மன் ஆலயம் பற்றிய பேச்சு ஒன்றினைத் தயாரிக்குக/ நிகழ்த்துக.

## சித்தாண்டி முருகன் ஆலயம்



மட்டக்களப்பு மாவட்டத்தின் வடபால் ஏறத்தாழ இருபத்திரண்டு கிலோ மீற்றர் தொலைவில் சித்தாண்டி எனும் கிராமத்தில் சித்தாண்டி முருகன் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயம் கிழக்கிலங்கையில் அமையப்பெற்ற திருப்படைக் கோயில்களுள் ஒன்றாகும்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் சிகண்டி என்னும் முனிவர் பெருமான் இங்கு வந்து, தம்மிடத்திலிருந்த இரும்பு வேலாயுதத்தை வழிபட்டார் எனவும், இம்முனிவர் பெருமான் பல அற்புதச் சித்துக்களைச் செய்தமையால் சித்தர் எனவும், நீறுபூத்த மேனியுடனும், உருத்திராக்கக் கோலத்துடன் விளங்கியமையால் ஆண்டி என்ற பெயரும் கொண்டு அழைக்கப்பட்டார். இவ்விரு பெயரும் சேர்த்து (சித்து+ஆண்டி) சித்தாண்டி என காரண இடுகுறிப்பெயராக அமைந்ததாகக் கூறப்படுகின்றது.

சித்தாண்டி முருகன் ஆலயத்தில் மகோற்சவம் ஆவணி மாதம் பிரதமையில் கொடியேற்றத்துடன் தொடர்ந்து பதினைந்து நாட்கள் இடம்பெறும். திருவிழாவின் பின் பௌர்ணமி தினத்தில் தீர்த்த உற்சவம் நடைபெறும். இவ்வுற்சவத்தில் முதல் மூன்று நாட்களும் கோயில் திருவிழாக்களாகும். நான்காம் நாள் முருகன் வள்ளியம்மை, தெய்வானை சமேதரராய் பவனி வருவார். ஏழாம் நாள் பட்டியன்குடித் திருவிழாவும், பன்னிரண்டாம் நாள் மயிற்கட்டுத் திருவிழாவும், கொடியிறக்கத்தன்று இடும்பன் பூசையும் நடைபெறும். இதில் பூசணிக்காய் பலியிடுதல் முக்கிய நிகழ்வாகும்.

இங்கு தெய்வானையம்மன் கோயிலில் மட்டும் திரை திறக்கப்படாது பூசை நடைபெறும். மூலஸ்தானமும், மற்றைய பரிவார கோயில்களும், வள்ளியம்மன் கோயிலும் பூசையின் போது திரை திறக்கப்பட்டு பூசை நடைபெறும்.

தீர்த்த உற்சவத்தன்று மாலை தலைபற்றோலை, குடை, கொடி, ஆலவட்டம், தீவட்டி முதலிய ஆசாரங்களுடன் வண்ணக்காரரான வன்னியனார் வீட்டிற்குச் செல்வதும், வன்னியனார் அனைவருக்கும் உணவு வழங்கிக் கௌரவிப்பதும் வழக்கமாகும். பின்னர் பலகாரப் பெட்டிகளுடன் வள்ளியம்மன் கோயிலுக்கு அனைவரும் வந்து சேருவர். இது வள்ளியம்மனுடைய திருமணத்தை நினைவூட்டு வதாக அமையும். இங்கு பாரம்பரிய கலை நிகழ்வுகளான வசந்தன் கூத்து, காவடி ஆட்டம், கரகம், கொம்பு விளையாட்டு என்பனவும், விசேட தினங்களான தைப்பொங்கல், தைப்பூசம், வருடப்பிறப்பு, கார்த்திகை விளக்கீடு, சிவராத்திரி, கந்தசஷ்டி, விநாயகர் சதுர்த்தி போன்றனவும் இடம் பெறுகின்றன.

கோயில் பற்றிய தலபுராண நூலொன்று ஆரப்பற்றை அழகேசமுதலி என்பவரால் சித்தாண்டி தலபுராணம் என்னும் மகுடம் இடப்பட்டு சிறப்பிக்கப் பட்டுள்ளது. திருவாளர் பிள்ளையான் சிவலிங்கம், பணிக்கன் - மயில்வாகனம் என்போரின் தனிப்பிரபந்தப் பாடல்கள் ஆகியன பட்டயம் என்னும் தலைப்பற்று ஓலையிலான ஏடு ஒன்று இக்கோயில் பற்றிய பண்டைய வரலாற்றுக் குறிப்புகள் மானியங்கள், நடைமுறைகள் பற்றிக் குறிப்பிடுகின்றன.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சித்தாண்டி முருகன் ஆலயம் எங்கு அமைந்துள்ளது?
2. சித்தாண்டி முருகன் என்ற பெயர் ஏற்படக்காரணம் யாது?
3. சித்தாண்டி முருகன் ஆலய மகோற்சவம் நடைபெறும் காலம் யாது?
4. சித்தாண்டி முருகன் ஆலயத்தில் நடைபெறும் கலை நிகழ்ச்சிகள் மூன்று தருக.

## செயற்பாடு

1. இலங்கையிலுள்ள முருகன் ஆலயங்களையும் அமைவிடங்களையும் அட்டவணைப்படுத்துக.
2. சித்தாண்டி ஆலயத்தின் பாரம்பரிய நடைமுறைகளைத் தொகுத்து எழுதுக.

## பேராதனை குறிஞ்சிக்குமரன் ஆலயம்

எழில் கொஞ்சும் மத்திய மலைநாட்டின் தலைநகரான கண்டியிலிருந்து நான்கு மைல் தொலைவில் பேராதனைப் பல்கலைக் கழகத்தை அடுத்துள்ள மலைப்பாங்கான இடத்தில் இவ்வாலயம் அமைந்துள்ளது. இலங்கையில் தேசிய பல்கலைக்கழகம் என்ற சிறப்பைப் பெற்ற பேராதனைப் பல்கலைக்கழகம் இளம் சமுதாயத்தினரிடையே சமய உணர்வுகள், மனத்திருப்தி, சமூக உறவுகளைப் பேணுதல் ஆகிய நல்ல நோக்கங்களை நிறைவேற்றும் பொருட்டு அனைத்துமத மாணவர்களுக்கும் உரிய அந்தஸ்தினை வழங்கியுள்ளது. அவ்வகையில் இந்துப் பட்டதாரி மாணவர்கள், பல்கலைக்கழக பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள் ஆகியோரின் ஆன்மீக வாழ்வு நலன்கருதி எழுந்ததே பேராதனை குறிஞ்சிக் குமரன் ஆலயமாகும்.

பேராதனை குறிஞ்சிக்குமரன் ஆலயத்தை அமைப்பதில் பேராதனைப் பல்கலைக்கழக இந்து மாணவர் சங்கம் அளப்பரிய பணிகளை ஆற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இந்து மாணவர் சங்கம் 1952 ஆம் ஆண்டு பேராசிரியர் ரீ. ஆர். வீ. மூர்த்தி அவர்களின் தலைமையில் உருவாகியது. ஆரம்பத்தில் கலைப்பீட அறை ஒன்றிலேயே வழிபாடு இடம்பெற்றது. இந்துப் பட்டதாரி மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்த காரணமாக நெருக்கடி ஏற்பட்டது. அதனால் இந்துப் பட்டதாரி மாணவர்களுக்கென ஆலயம் ஒன்று அமைக்க வேண்டுமென்ற சிந்தனை ஏற்பட்டது.

1956 ஆம் ஆண்டில் இந்து மாணவர் சங்கத்தின் பெருந் தலைவராகப் பொறுப்பேற்ற பேராசிரியர் த. நடராசா அவர்கள், தமது தாயாரின் ஞாபகார்த்தமாக கோயில் திருப்பணிக்கு முதல் முதலில் நிதியை வழங்கினார். இவ்வாலயத் திருப்பணி வளர்ச்சிக்கு பேராசிரியர் கனக சபாபதி பேரம்பலம் அவர்கள் அளப்பரிய பணியை ஆற்றியிருந்தார். பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள், மாணவர்கள் ஆகியோரின் அயராத உழைப்பினால் 1966 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 27 ஆம் திகதி ஆலயத்திற்கு நிலம் ஒதுக்கப்பட்டு அத்திவாரக் கல் நாட்டப்பட்டது. 1968 ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் 24 ஆம் நாள் வியாழக்கிழமை அத்த நட்சத்திரம் பொருந்திய சுபமூகூர்த்த வேளையில் மகா கும்பாபிசேகம் நிறைவேறியது.

ஆலயத்தில் பிரதிட்டை செய்யப்பட்ட திருவுருவங்கள் யாழ்ப்பாணத்திலுள்ள மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயத்திலிருந்து புறப்பட்டு, பக்தர்கள் புடைசூழ அடியவரின் பஜனை கோசம் வானதிர ஒலிக்க வவுனியா, அனுராதபுரம், மாத்தளை ஊடாகக் கண்டி கட்டுக்கலை செல்வ விநாயகர் ஆலயத்தை ஊர்வலமாக அடைந்து, பின் பேராதனை குறிஞ்சிக்குமரன் ஆலயத்திற்கு எடுத்துச்செல்லப்பட்டுப் பிரதிட்டை செய்யப்பட்டது.

இவ்வாலயத்தின் மூலமூர்த்தி குறிஞ்சிக்குமரன் ஆவார். ஆலயத்தின் அருகில் ஓடுகின்ற மகாவலி கங்கையின் கிளையாறு தீர்த்தமாகும். வெள்ளைக்காரப் பாதிரியார் ஒருவர் ஆலய அமைவிட அழகையும் அமைதியையும் கண்டு முருகன்பால் மனதைப் பறிகொடுத்து அங்கிருந்து தொண்டு செய்து வந்தமை இவ்வாலயத்தின் சிறப்புகளில் ஒன்றாகும். விநாயகர், சிவன், நடேசர், விஸ்ணு, வைரவர், நவக்கிரகங்கள் ஆகிய தெய்வங்கள் பரிவார தெய்வங்களுக்கு சன்னிதிகள் அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாலயத்தின் சிற்பங்கள் இந்திய - இலங்கை சிற்பிகளின் கை வண்ணத்தில் உருவானவை. தெய்வயானை திருமணம், முருகப்பெருமான் சரவணப் பொய்கையில் ஆறு குழந்தைகளாகத் தோன்றிய காட்சி, மன்மதனை எரித்த காட்சி, முருகப் பெருமான் தந்தைக்கு உபதேசம் செய்த சிற்பக் காட்சிகள் என்பன ஆலயத்தில் விமானத்திலுள்ள சிற்பங்களில் சித்திரிக்கப்பட்டுள்ளன.

குறிஞ்சிக்குமரன் ஆலயத்தில் நித்திய பூசைகளும் நைமித்திய பூசை களான நவராத்திரி, சித்திராபௌர்ணமி, கந்தசஷ்டி, திருவெம்பாவை, தைப்பூசம், திருக்கார்த்திகை உற்சவம், நடேசதரிசனம், அலங்கார உற்சவம் ஆகியன வெகுசிறப்பாக நடைபெறுகின்றன.

இவ்வாலயத்தின் நிர்வாகமானது பேராதனைப் பல்கலைக்கழகப் பேராசிரி யர்கள், விரிவுரையாளர்கள், பல்கலைக்கழக இந்து மாணவர்கள், இப்பல்கலைக் கழகத்திலிருந்து வெளியேறிய பட்டதாரி மாணவர்கள் ஆகியோரை உள்ளடக்கிய குழுவினரால் நெறிப்படுத்தப்பட்டு வருகின்றது. மாணவர்களைப் பல்வேறு செயற் பாடுகளில் ஈடுபடுத்துவதன் மூலம் அரிய சாதனைகளை நிலை நாட்டலாம் என்ப தற்குப் பேராதனை குறிஞ்சிக்குமரன் ஆலயம் ஓர் உதாரணமாகும்.

## பாடச் சுருக்கம்

- குறிஞ்சிக்குமரன் ஆலயம் பேராதனைப் பல்கலைக்கழக வளாகத்தில் அமைந்துள்ளது.
- பேராதனை குறிஞ்சிக்குமரன் ஆலயம் இந்து மாணவர்கள், விரிவுரையாளர்கள், பொதுமக்கள் ஆகியோரின் ஆன்மீகத் தேவைகளை நிறைவேற்றி வருகிறது.
- ஆலயத்தில் பிரதிட்டை செய்யப்பட்ட திருவுருங்கள் மாவிட்ட புரத்திலிருந்து கொண்டு வரப்பட்டன.
- குறிஞ்சிக்குமரன் ஆலய விமானத்தில் முருக வரலாற்றுச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.
- விசேட பூசைகள், விழாக்கள், பல்கலைக்கழக மாணவர் சங்கத்தால் நடாத்தப்படுகின்றன.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. குறிஞ்சிக்குமரன் ஆலயத்தின் அமைவிடத்தை எழுதுக.
2. குறிஞ்சிக்குமரன் ஆலயத்தின் தீர்த்தம் யாது?
3. குறிஞ்சிக்குமரன் ஆலயத்தை நிர்வகிப்போர் யாவர்?
4. குறிஞ்சிக்குமரன் ஆலயத்தில் அனுட்டிக்கும் விரதங்கள் இரண்டினைக் கூறுக.
5. இவ்வாலயத்தில் காணப்படும் பரிவாரத் தெய்வங்கள் மூன்றைக் குறிப்பிடுக.
6. குறிஞ்சிக்குமரன் ஆலயத்தில் பிரதிட்டை செய்யப்பட்ட திருவுருவங்கள் எங்கிருந்து ஊர்வலமாக எடுத்து வரப்பட்டன?

## செயற்பாடு

உங்கள் ஊரிலுள்ள முருகன் ஆலயங்களுக்குச் சென்று அவை தொடர்பான தகவல்களைச் சேகரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# 17 இலங்கையிலுள்ள சமயங்கள்

இலங்கையில் பல இன, மத, கலாசாரங்களைக் கொண்ட மக்கள் வாழ்கின்றார்கள். அந்தவகையில் இங்குள்ள மக்களால் பிரதானமாக நான்கு சமயங்கள் பின்பற்றப்படுகின்றன. அவை சைவம், பௌத்தம், கிறிஸ்தவம், இஸ்லாம் என்பனவாகும். இங்கு நாம் இவை பற்றிய சுருக்கமான விளக்கம் ஒன்றினைக் கற்போம்.

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு சைவம் விளங்குகின்றது. இலங்கையில் சராசரியாக பதின்மூன்று வீத மக்கள் இந்துசமயத்தைப் பின்பற்றி வருகின்றனர். உருவ, ஆலய வழிபாட்டினை இவர்கள் பிரதானமாகக் கொள்கின்றனர். இந்து சமயத்தின் அடிப்படை நூல்களாக வேதம், ஆகமம் என்பன திகழ்கின்றன. இலங்கையில் இந்துக்கள் முக்கிய பல பண்டிகைகளைக் கொண்டாடி வருகின்றனர். அவை, தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, தீபாவளி என்பனவாகும். அத்துடன், வருடத்தில் வரக்கூடிய முக்கிய தினங்களில் விரதங்களையும் அனுஷ்டித்து வருகின்றனர். குறிப்பாக கந்தசஷ்டி விரதம், விநாயக சதுர்த்தி விரதம், நவராத்திரி விரதம், புரட்டாதிச்சனி, சிவராத்திரி விரதம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

பௌத்த சமயம் என்பது புத்தபகவானின் போதனைகளை அடிப்படையாகக் கொண்டதாகும். தேரவாத பௌத்தம், மகாயான பௌத்தம் என பௌத்தம் இரண்டு பிரிவுகளாகக் காணப்பட்டாலும், இலங்கை பௌத்தர்கள் தேரவாத பௌத்தத்தையே கைக்கொள்கின்றார்கள். இலங்கையில் சராசரியாக எழுபது வீத மக்கள் இம்மதத்தைத் தழுவி வருவதோடு, புத்தசமயமே இலங்கையின் பிரதான சமயமாகவும் காணப்படுகின்றது. விகாரைகளுக்குச் சென்று வழிபட்டுவரும் இம்மக்களின் பிரதான நூல்களாக திரிபிடகம், தம்மபதம் என்பன காணப்படுகின்றன. விசாக பௌர்ணமி, பொசன் பௌர்ணமி, சித்திரைப் புத்தாண்டு என்பன இம்மக்களால் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

இஸ்லாம் சமயத்தின் வழிபாட்டுக்குரியவராக அல்லாஹ் காணப்படுகின்றார். இலங்கையில் சராசரியாக பத்து வீத மக்கள் இஸ்லாம் சமயத்தைக் கடைப்பிடிக் கின்றனர். பள்ளிவாசல்களுக்குச் சென்று வழிபட்டு வரும் இவர்களின் பிரதான நூலாக திருக்குர்ஆன் காணப்படுகின்றது. நோன்புப் பெருநாள், ஹஜ்ஜுப் பெருநாள் போன்றன இவர்களது சிறப்பான பண்டிகைகளாகும்.

கிறிஸ்தவ சமயத்தின் வழிபாட்டுக்குரியவராக இயேசு கிறிஸ்து காணப் படுகின்றார். இலங்கையில் சராசரியாக ஏழு வீத மக்கள் கிறிஸ்தவ சமயத்தைக் கடைப்பிடிக்கின்றனர். தேவாலயங்களில் வழிபட்டுவரும் இவர்களின் பிரதான நூல் பைபிள் ஆகும். ஆங்கிலப் புத்தாண்டு, பெரிய வியாழன், புனித வெள்ளி, ஈஸ்டர், கிறிஸ்துமஸ் போன்றன இவர்களால் சிறப்பாகக் கொண்டாடப்படும் திருநாள்களாகும்.

## பாடச் சுருக்கம்

- இலங்கையில் சைவம், பௌத்தம், இஸ்லாம், கிறிஸ்தவம் எனும் சமயங்கள் காணப்படுகின்றன.
- ஒவ்வொரு மதத்திற்கும் வழிபாட்டுத்தலங்கள், புனித நூல்கள், கடவுளர்கள் காணப்படுகின்றனர்.

## பயிற்சிகள்

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இலங்கையிலுள்ள பிரதான சமயங்கள் எவை?
2. இந்துக்கள் கொண்டாடும் பண்டிகைகள் இரண்டு தருக.
3. பௌத்தர்களின் புனித நூல்கள் எவை?
4. இஸ்லாமியப் பண்டிகைகள் எவை?
5. கிறிஸ்தவ மதத்தின் வழிபாட்டுக்குரியவர் யார்?

## செயற்பாடு

இந்து, பௌத்தம், இஸ்லாம், கிறிஸ்தவம் ஆகிய ஆகிய சமயங்களைப் பின்பற்றும் மக்களது கலாசார விடயங்களில் முக்கியமானவற்றைத் தேடித் தொகுத்து ஒப்படையாக்குக.